அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர அகவல்

மாதுஸ்ரீ V. R. லக்ஷ்மி அம்மாள்
இயற்றியது.

தேவநாகரியிலும் தமிழிலும்

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்துடன் கூடியது.



சோபக்ருத் ஆச்வயுஜம்

1963

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,

ஸ்ரீரங்கம்.

# முன்னுரை

தேவியின் அருளாடல்களைச் சொல்லும் தேவீ பாகவதம் முதலிய பல நூல்கள் வடமொழியில் இருக்கின்றன. தேவியை வழிபடு கடவுளாகக்கொண்ட அன்பர்கள் அவற்றையெல்லாம படித்திருப்பார்களா என்று சொல்வதற்கு இல்லை. ஆனால் தேவீ உபாஸகர்கள் யாவரும் பாராயணம் செய்து பூஜையில் பயன்படுத்தும் நூல் ஒன்று உண்டு. அதுவே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸதோத்திரம்.

அன்னையின் ஆயிரம் திருநாமங்களை அழகுபெறச் சொல்லுவது அது. தேவியின் ஆகமங்களிலும், தேவி சம்பந்தமான புராணங்களிலும், வேதோபநிஷதங்களிலும் உள்ள தேவியைப்பற்றிய உண்மைகளையெல்லாம் இந்த நூலில் கண்டுகொள்ளலாம். எல்லா ரத்தினங்களும் அடங்கிய பாற்கடல் இது.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களிலும் அம்பிகையை ஆராதிப்போர் அநுபவித்து அறியும் உண்மைகளை இந்த அற்புத நூல் அடுக்கடுக்காகச் சொல்கிறது. மந்திர சாஸ்திரமாகவும், காவியமாகவும், தத்துவ நூலாகவும் சொல்லுவதற்கு ஏற்ற பாங்குகள் இதில் உள்ளன.

இத்தகைய நூலுக்குத் தேவியின் பேரருள் பெற்ற ஸ்ரீ பாஸ்கரராயர் பாஷ்யம் அருளியிருக்கிறார். அவருடைய பேருரை இந்த நூலில உள்ள அற்புதங்களையெல்லாம் கண்ணாடிபோலக் காட்டுகிறது.

இவ்வளவு சிறப்புடைய ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தைத் தேவியினிடம் உள்ள அன்பின் மிகுதியால் தமிழில் அகவலுருவில் மாதுஸ்ரீ வி. ஆர். லக்ஷ்மி அம்மாள் அவர்கள் நன்கு மொழிபெயர்த்திருக்கிறார்கள்.

அகவல் எளிதில் பாடத்தக்கது; எளிதில் பொருளை விளக்குவது. ஸ்ரீ பாஸ்கரராயர் பாஷ்யத்தையும் தேர்ந்து, நாமங்களுக்கு விளக்கமாயுள்ள பொருள்களையும் பல இடங்களில் இணைத்திருக்கிறார் இந்த அம்மையார்.

யாவரும் படிக்கத்தகுந்த எளிய நடையில் அமைந்த இது பாடியவருடைய பக்திச்சிறப்பை எடுத்துக்காட்டுகிறது. மகாமாதாவின் திருவருளால் இது பலருக்கும் பயன்பட வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

"காந்தமலை"
சென்னை-28.

கி. வா. ஜகந்நாதன்.

# பதிப்புரை

ஸ்ரீ ஜகதம்பிகையான ஸ்ரீ பரதேவதையின் திவ்ய மஹிமைகளை விளக்கும் நூல்களில் ஸ்ரீலலிதாஸஹஸ்ரநாமஸ்தோத்திரத்திற்கு ஈடான மற்றோர் நூலை நாம் எங்கும காணமுடியாது. உபநிஷத்துக்களில் பொதிந்துள்ள பல அரிய கருத்துக்களையும், மந்திர சாஸ்திரத்திலும், யோக நூல்களிலும் கூறபபட்ட பல தத்வங்களையும் இங்கு காணலாம். அதிலும் ஔபநிஷதமான அத்வைதம் நன்கு விளக்கிக்காட்டப்படுகிறது. அம்பிகையை ஸச்சிதானந்த ரூபமான பரப்ரஹ்மதத்வமாகவே இங்கு வர்ணிக்கிறா. அம்பிகையின் பரமபக்தரும் சிறந்த அத்வைதியுமான ஸ்ரீபாஸ்கரராயர் இதற்கு மிகவும் விரிவான வ்யாக்யானம் செய்துள்ளார் நாமாக்களின் கருத்துக்களை நன்கு தெரிந்து கொண்டு அர்ச்சனை செய்தாலும் பாராயணம் செய்தாலும் அதற்கு விசேஷ பலனுண்டு.

ஸம்ஸ்கிருத பாஷையில் மிகுந்த பரிசயமில்லாதவர்களும் ஸுலபமாக லலிதாஸஹஸ்ரநாமக் கருத்துக்களை நன்கு புரிந்து கொள்வதற்காகவே மாதுஸ்ரீ லக்ஷ்மி அம்மாள் தமிழ் பாஷையில், அதிலும் மனதில் நிலைநிறுத்திக்கொள்வதற்கு ஸௌகர்யமாக அகவல் பாட்டுக்களாகவே லலிதாஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் முழுவதையும் இயற்றித்தந்துள்ளார்கள். அவருக்கு நாம் என்றும் கடமைப்பட்டுள்ளோம். இதை நம் ஸ்ரீ சங்கர கிருபா பத்திரிகையில் பிரசுரிக்க அனுமதியளித்தமைபற்றி அவருக்கு நம் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நம் தேசத்தில் முக்யமாகத் தமிழ் உலகில் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்களை அறியாதார் யாருமிலர். நம் ஸ்ரீ சங்கர கிருபா பத்திரிகையில் 'அபிராமி அந்தாதி விளக்கக்' கட்டுரையில் நம் அனுபவங்களை உதாரணமாகக் காட்டி அம்பிகையின் ஒப்பற்ற குணகணங்களை அவர் நன்கு விளக்கிவருவதை நாம் படித்து ஸந்தோஷமடைந்துவருகிறோம். எங்கள் வேண்டுகோளுக்கிணங்கி இந்நூலுக்கு முகவுரை எழுதிக்கொடுத்த அன்னாருக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்நூலில் படிப்பவர்களின் சௌகரியத்திற்காக ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திலுள்ள சுலோகங்களை தேவநாகரி லிபியிலும் தமிழ் லிபியிலும் அச்சிட்டு அதன் அடியில் அந்தந்த சுலோகங்களின் கருத்துக்களைக்காட்டக் கூடிய தமிழ் அகவல் பாட்டுக்கள் ஆங்காங்கு கொடுக்கப்பட்டு இருக்கிறது.

இவ்விதமான நற்காரியங்களில் நாம் ஈடுபடும்படி அருள் பரிபாலித்துவரும் சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு சரணாரவிந்தங்களில் அனந்தப்ரணமங்களை ஸமர்ப்பிக்கிறோம்.

ஶ்ரீ:

ஸ்ரீ பரமானந்த ஸிந்துவென்னும்

# ஸ்ரீ லலிதா திவ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

## துதி அகவல்

### ஸ்ரீ விநாயகர் துதி

ஐங்கரத்தோனே சங்கரிபாலா
யானை முகவா வல்லபை கணவா
அம்பிகை ஸ்ரீ லலிதேசுவரி நாமிக
ரகஸியமாகிய ஸஹஸ்ரநாமத்தை
எளிதாய் பக்தருணர்ந்திடும் வண்ணம்
எழுதியே தமிழில் துதித்திடவேணும்
கணபதியேநின் கோடெழுது
கோலாலெழுதிக் கொடுத்திடுவாயே.

### ஸ்ரீ பரமேசுவரியின் தூலவுடல் வர்ணனை

श्रीमाता श्रीमहाराज्ञी श्रीमत्सिंहासनेश्वरी ।

ஸ்ரீமாதா ஸ்ரீமஹாராஜ்ஞீ ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேசுவரீ ।

அகில ஜகங்களுக் கன்னாய் போற்றி
அரசற் கெல்லா மரசியே போற்றி
ஆறும் நய ஸ்வரூபங்க ளெனவே
அதிரகஸியமாய் ஆகம முரைக்கும். 1

பூர்வ பச்சிம தக்ஷிண உத்தர
மத்திய மெனமா மந்திர வடிவாம்
பஞ்ச ஸிம்ஹா சனங்களுக் கதிபதியாம்
பரையே! த்ரிபுர ஸுந்தரியே போற்றி. 2

चिदग्निकुण्डसंभूता देवकार्यसमुद्यता ॥

சிதக்னி குண்டஸம்பூதா தேவகார்ய ஸமுத்யதா ॥

நிர்மல அறிவாம் சித்தெனு மக்கினி
குண்டத்தி லுதித்த சிவையே போற்றி.
துர்மதி யாகிய பண்டனை வதைத்தே
தேவரைக் காத்திடத் தோன்றினை போற்றி. 3

उद्यद्भानुसहस्राभा चतुर्बाहुसमन्विता ।
रागस्वरूपपाशाढ्या क्रोधाकाराङ्कुशोज्ज्वला ॥

உத்யத்பானு ஸஹஸ்ராபா சதுர்பாஹு ஸமன்விதா ।
ராகஸ்வரூபபாசாட்யா க்ரோதாகாராங்குசோஜ்வலா ॥

*இளம்ரவி கோடியி னொளியே போற்றி*
*எழில்மிகு கரம் நான் குடையாய் போற்றி*
*ஆசை யெனும் கயிற் தரித்தனை போற்றி*
*அங்குச மாய் சினம வகித்தனை போற்றி.* 4

मनोरूपेक्षुकोदण्डा पञ्चतन्मात्रसायका ।
निजारुणप्रभापूरमज्जद्ब्रह्माण्डमण्डला ॥

மனோரூபேக்ஷு கோதண்டா பஞ்சதன்மாத்ர ஸாயகா ।
நிஜாருணப்ரபாபூர மஜ்ஜத்ப்ரம்மாண்டமண்டலா ॥

*மனமாம் கரும்புவில் கரத்தாய் போற்றி*
*ஐம்பொறி விடய அம் புடையாய் போற்றி*
*எழில்மிகும் நின்செந் நிறமா மொளியில்*
*மூழ்க பிர்மாண்டம மிளிரவாய் போற்றி.* 5

चम्पकाशोकपुन्नागसौगन्धिकलसत्कचा ।
कुरुविन्दमणिश्रेणीकनत्कोटीरमण्डिता ॥

अष्टमीचन्द्रविभ्राजदलिकस्थलशोभिता ।

சம்பகாசோகபுன்னாக ஸெளகந்திகலஸத்கசா ।
குருவிந்தமணி ச்ரேணீகனத்கோடீர மண்டிதா ॥

அஷ்டமீ சந்த்ரவிப்ராஜதளிக ஸ்தலசோபிதா ।

*பனிமலர் சூடிய குழலே போற்றி*
*பிரகாசிக்கும் மகுடம் தரித்தனை போற்றி*
*அஷ்டமி மதிபோ லழகிய நுதலாய்*
*அம்மை மஹாத்ரிபு ரேசுவரி போற்றி.* 6

मुखचन्द्रकलङ्काभमृगनाभिविशेषका ॥

முகசந்த்ர களங்காப ம்ருகநாபி விசேஷகா ॥

முகமாம் மதியின் களங்கத்தைத் திரட்டி
நுதலிடை திலகம் என நீ தரித்தாய் 7

वदनस्मरमाङ्गल्यगृहतोरणचिल्लिका ।
वक्त्रलक्ष्मीपरीवाहचलन्मीनाभलोचना ॥

வதனஸ்மரமாங்கல்ய க்ருஹதோரண சில்லிகா |
வக்த்ரலக்ஷ்மீ பரீவாஹ சலன்மீனாபலோசனா ||

அம்மைநின் முகமா மனங்கன் மனையின்
தோரணமென நின் புருவங்கள் தோணும்
நின்முக வெழிலெனு மரும்பெரு மருவியில்
களிக்கும் மீனென விழிகளும் காணும். 8

नवचम्पकपुष्पाभनासादण्डविराजिता ।
ताराकान्तितिरस्कारिनासाभरणभासुरा ॥

कदम्बमञ्जरीक्लृप्तकर्णपूरमनोहरा ।

நவசம்பக புஷ்பாப நாஸாதண்ட விராஜிதா |
தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரணபாஸுரா ||

கதம்பமஞ்ஜரீ க்லுப்தகர்ணபூர மனோஹரா |

சண்பக மலரென நாசிகை யுடையாய்
சுக்கிரன் போலொளிர் மூக்கணி யுடையாய்
கதம்ப மலர்களைக் காதிடை செருகிய
வதனால் மிகுதியு மழகினை யுடையாய். 9

ताटङ्कयुगलीभूततपनोडुपमण्डला ॥

पद्मरागशिलादर्शपरिभाविकपोलभूः ।
नवविद्रुमबिम्बश्रीन्यक्कारिदशनच्छदा ॥

தாடங்கயுகளீபூத தபனோடுப மண்டலா ||

பத்மராக சிலாதர்ச பரிபாவிகபோலபூ: |
நவவித்ருமபிம்பஸ்ரீ ந்யக்காரிதசனச்சதா ||

*அம்மை நின திரு செவிகளி னணிகள்*
*செம்மை மிகும் ரவி சந்திர ராவர்*
*மாணிக்கச் சில்லினைப் பழிக்கும் கன்னங்கள்*
*மேலாம் பவளத்தை யிகழ்ந்திடு மிதழ்கள்* 10

शुद्धविद्याङ्कुराकारद्विजपङ्क्तिद्वयोज्ज्वला ।
कर्पूरवीटिकामोदसमाकर्षद्दिगन्तरा ॥

சுத்தவித்யாங்குராகார த்விஜபங்க்தி த்வயோஜ்வலா |
கர்ப்பூரவீடிகாமோத ஸமாகர்ஷத்திகந்தரா ||

*ஒப்பற்ற முப்பத்தி யிரண்டு வித்தைகள் போல்*
*அற்புத மாக நின் தந்தங்கள் ஒளிரும்*
*வதனத்தி லடக்கிய வாசனைத் தம்பலம்*
*மிக்கவு மினிப்பாய் திக்கெங்கும் கமழும்.* 11

निजसँल्लापमाधुर्यविनिर्भर्त्सितकच्छपी ।
मन्दस्मितप्रभापूरमज्जत्कामेशमानसा ॥

நிஜஸல்லாபமாதுர்ய விநிர்பர்த்ஸிதகச்சபீ |
மந்தஸ்மிதப்ரபாபூர மஜ்ஜத் காமேசமானஸா ||

*யாழினைப் பழித்திடு மினிய மென் மொழியாய்*
*நின்பதி காமே சுவரரது மனதுன்*
*புன்னகை யாமொளி அருவியில் மூழ்கிப்*
*போனதே யாமெனப் புலவர்க ளுரைப்பர்* 12

अनाकलितसादृश्यचिबुकश्रीविराजिता ।
कामेशबद्धमाङ्गल्यसूत्रशोभितकन्धरा ॥

அநாகலிதஸாத்ருச்யசிபுக ஸ்ரீ விராஜிதா |
காமேசபத்தமாங்கல்ய ஸூத்ரசோபித கந்தரா ||

*உவமையிலா முகவாய்க் கட்டை யுடையாய்*
*உன் பதி கரத்தால் பூட்டிய மாங்கல்யக்*
*கயிறது விளங்கும் வலம்புரி சங்கென*
*கண்டோர் வியக்கும் கண்டம துடையாய்.* 13

कनकाङ्गदकेयूरकमनीयभुजान्विता ।
रत्नग्रैवेयचिन्ताकलोलमुक्ताफलान्विता ॥
कामेश्वरप्रेमरत्नमणिप्रतिपणस्तनी ।

கனகாங்கத கேயூரகமநீயபுஜான்விதா ।
ரத்நக்ரைவேய சிந்தாகலோல முக்தாபலாந்விதா ॥
காமேசுவரப்ரேமரத்ன மணிப்ரதிபணஸ்தனீ ।

செம்பொன் கடகங்கள் மிளிர்புய முடையாய்
திவ்ய மஹாரத்ன ஹாரங்க ளுடையாய்
நின்பதி அன்பெனும் ஒப்பற்ற மணியை
தனமெனும் பொருளால் தன்வய மாக்கினை 14

नाभ्यालवालरोमालिलताफलकुचद्वयी ॥
लक्ष्यरोमलताधारतासमुन्नेयमध्यमा ।

நாப்யாலவால ரோமாளிலதாபல குசத்வயீ ॥
லக்ஷ்யரோமலதாதாரதாஸமுன்னேய மத்யமா ।

உந்தியி லுதித்த வுரோமக் கொடியின்
பழங்க ளென்றே நின் குசங்களைப் பகர்வர்
உமையே ரோமக் கொடியிருப் பதனுல்
ஊஹிக்க லாகும் நினதுண் ணிடைதான். 15

स्तनभारदलन्मध्यपट्टबन्धवलित्रया ॥
अरुणारुणकौसुम्भवस्त्रभास्वत्कटीतटी ।
रत्नकिङ्किणिकारम्यरशनादामभूषिता ॥

ஸ்தனபாரதலன்மத்ய பட்டபந்த வலித்ரயா ॥
அருணருண கௌஸும்ப வஸ்த்ரபாஸ்வத்கடீதடீ ।
ரத்னகிங்கிணிகாரம்ய ரசனாதாமபூஷிதா ॥

பருத்தநின் தனத்தா லிடையொடி யாவண்ணம்
பொருத்திய பூணைக்கும் உதர மடிப்புகள்
சிறந்த பட்டாடை யிலங்கிடு மிடையாய்
திவ்யகிங் கிணியுள மேகலை யுடையாய். 16

कामेशज्ञातसौभाग्यमार्दवोरुद्वयान्विता ।
माणिक्यमकुटाकारजानुद्वयविराजिता ॥

इन्द्रगोपपरिक्षिप्तस्मरतूणाभजङ्घिका ।
गूढगुल्फा कूर्मपृष्ठजयिष्णुप्रपदान्विता ॥

காமேசக்ஞாத ஸௌபாக்ய மார்தவோரு
த்வயான்விதா ।
மாணிக்ய மகுடாகார ஜாநுத்வயவிராஜிதா ॥

இந்த்ரகோப பரிக்ஷிப்த ஸ்மர தூணாபஜங்கிகா ।
கூடகுல்பா கூர்மப்ருஷ்டஜயிஷ்ணு ப்ரபதான்விதா ॥

நின்பதி சிவனூர் ஒருவரே யறிவர்
ஸௌந்தர மாயிரு துடைகளின் மேன்மையை. 17

மாணிக்க மகுடம் போலும் நின் முழங்கால்
மதன தூணீரம் போல நின் ஜங்கைகள்
கூடமா மழகிய குதிகா லுடையாய்
கூர்ம முதுகை யொக்கும நின் புறங்கால்கள் 18

नखदीधितिसंछन्ननमज्जनतमोगुणा ।

நகதீதிதி ஸஞ்சன்ன நமஜ்ஜன தமோகுணா ।

நின்னடி பணிவா ருளத்துள விருளை
நீக்கிடும் நின் நக வொளி யெனும் பரிதி

पदद्वयप्रभाजालपराकृतसरोरुहा ॥

शिञ्जानमणिमञ्जीरमण्डितश्रीपदाम्बुजा ।

பதத்வய ப்ரபாஜால பராக்ருத ஸரோருஹா ॥

ஶிஞ்ஜாந மணிமஞ்ஜீர மண்டித ஸ்ரீபதாம்புஜா ।

செந்தா மரைகளை ஜயித்த மெல் லடியாய்
செஞ்சிலம் பொலித்திடும் திருவடி யுடையாய் 19

मरालीमन्दगमना महालावण्यशेवधिः ॥
மராளீமந்தகமநா மஹாலாவண்யஶேவதி: ||

அன்னப் பேடென அமர்ந்தமெந் நடையாய்
அகில வெழில்களுக் கெல்லையே யாவாய்

सर्वारुणानवद्याङ्गी सर्वाभरणभूषिता ।
ஸர்வாருணாநவத்யாங்கீ ஸர்வாபரணபூஷிதா ।

அணிதுகில் மாலை பூஷணம் சந்தனம்
அனைத்திலும் செந்நிறம் வகித்தனை போற்றி. 20

நின்னிடை குறையோர் வகையிலு மில்லை
நிறையவே பூஷண மணிந்தனை போற்றி

शिवकामेश्वराङ्कस्था शिवा स्वाधीनवल्लभा ॥
ஶிவகாமேச்வராங்கஸ்தா ஶிவா ஸ்வாதீநவல்லபா ||

சிவகா மேசுவர ரெனும் பதி மடிமேல்
சீருட னமரும் சிவையே போற்றி. 21

மங்களரூபி சிவையே போற்றி
மாலயன் தேடியும் காணுச் சிவனுர்
நின்வய மாயவர் நிற்குமற் புதம்தான்
என்னே ! என்னே ! இயம்பவொண் ணுதே. 22

सुमेरुमध्यशृङ्गस्था श्रीमन्नगरनायिका ।
चिन्तामणिगृहान्तस्था पञ्चब्रह्मासनस्थिता ॥
ஸுமேருமத்ய ச்ருங்கஸ்தா ஸ்ரீமந்நகரநாயிகா ।
சிந்தாமணி க்ருஹாந்தஸ்தா பஞ்சப்ரஹ்மாஸநஸ்திதா ||

மேருவின் மத்திய சிகரத்தி லமர்ந்தாய்
மேலாம் ஸ்ரீபுர நாயகி யாணுய்
சிந்தா மணி கிருஹ மத்தியி லிருந்தாய்
சீருடன் பஞ்ச பிர் மாஸனத் துறைந்தாய். 23

महापद्माटवीसंस्था कदम्बवनवासिनी ।
மஹாபத்மாடவீஸம்ஸ்தா கதம்பவநவாஸிநீ ।

அழகு செந் தாமரைக் காட்டிடை வசிப்பாய்
அற்புத கதம்ப வனத்திலு மிருப்பாய்

सुधासागरमध्यस्था कामाक्षी कामदायिनी ॥

ஸுதாஸாகர மத்யஸ்தா காமாக்ஷீ காமதாயிநீ ॥

திவ்யா மிருதமாம் ஸாகர மத்தியில்
சிறப்புடன் வசிக்கும் சிவையே போற்றி 24

காமனைக் கண்ணிடை இரஹித்தாய் போற்றி
கனிவுடன் பக்தர் விரும்பிடு மவற்றை
கருணை பொழிந்திடும் கடைக்கண் ணேக்கால்
கணத்தில் தரும் கா மாக்ஷியே போற்றி 25

ஸ்ரீ தேவி பண்டனை வதைத்தது

देवर्षिगणसंघातस्तूयमानात्मवैभवा ।

தேவர்ஷி கணஸங்காத ஸ்தூயமாநாத்மவைபவா ।

தேவருடன் முனி ஸித்த கணங்களும்
திருவடி தொழுதுன் மகிமையைப் புகழ்வர்

भण्डासुरवधोद्युक्तशक्तिसेनासमन्विता ॥

பண்டாஸுர வதோத்யுக்த ஶக்திஸேநாஸமந்விதா ॥

பண்டனை வதைத்திட சக்திகள் சேனையைத்
திரட்டியே போர்செய்யப் புறப்பட் டனை நீ. 26

संपत्करीसमारूढसिन्धुरव्रजसेविता ।
अश्वारूढाधिष्ठिताश्वकोटिकोटिभिरावृता ॥

ஸம்பத்கரீ ஸமாரூட ஸிந்துரவ்ரஜ ஸேவிதா ।
அச்வாரூடாதிஷ்டிதாச்வ கோடிகோடிபிராவ்ருதா ॥

ஸம்பத் கரியெனும் சக்தியின் யானைப்
படைகள் சூழ்ந்திடப் புறப்பட் டனை நீ
துரகா ரூடையின் குதிரைப் படைகளின்
கோடிகள் சூழ புறப்பட் டனை நீ 27

चक्रराजरथारूढसर्वायुधपरिष्कृता ।
गेयचक्ररथारूढमन्त्रिणीपरिसेविता ॥

சக்ரராஜரதாரூட ஸர்வாயுத பரிஷ்க்ருதா |
கேயசக்ரரதாரூட மந்த்ரிணீ பரிஸேவிதா ||

*ஸர்வா யுதமுள ஸ்ரீ சக்ர ராஜ*
*ரதந்தனி லேறி நீ புறப்பட் டனை*
*கேய சக்ரரத மேறிய மந்திரிணீ*
*முன் செலப் போருக்கு முனைந்திட் டனை நீ.* 28

किरिचक्ररथारूढदण्डनाथापुरस्कृता ।
ज्वालामालिनिकाक्षिप्तवह्निप्राकारमध्यगा ॥

கிரிசக்ர ரதாரூட தண்டநாதாபுரஸ்க்ருதா |
ஜ்வாலாமாலிநிகாக்ஷிப்த வஹ்நிப்ராகார மத்யகா ||

*கிரிசக்ர ரதத்தில் ஏறிய வாராஹீ*
*முன்செலப் போருக்கு நீ முனைந் திட்டனை*
*ஜ்வாலா மாலினி சக்தி யமைத்த*
*அக்கினிக் கோட்டையி லமர்ந்தங் கிருந்தனை.* 29

भण्डसैन्यवधोद्युक्तशक्तिविक्रमहर्षिता ।
नित्यापराक्रमाटोपनिरीक्षणसमुत्सुका ॥

பண்டஸைந்ய வதோத்யுக்த ஶக்திவிக்ரம ஹர்ஷிதா |
நித்யா பராக்ரமாடோப நிரீக்ஷண ஸமுத்ஸுகா ||

*பண்டனின் அஸுரப் படைகளைச் சக்திகள்*
*கண்ட துண்டமிடக் கண்டே மகிழ்ந்தனை*
*நித்யா சக்திகள் போர்செய அவரின்*
*பராக்ரம மதனைப் பார்த்தே மகிழ்ந்தனை.* 30

भण्डपुत्रवधोद्युक्तबालाविक्रमनन्दिता ।

பண்டபுத்ர வதோத்யுக்த பாலாவிக்ரம நந்திதா |

நின்மகள் பாலை சின்னஞ் சிறியவள்
குதித்தவளோடி பண்டனின் மைந்தரை
மெத்தவும் லகுவாய் யுத்தத்தில் வீழ்த்திட
கண்டதை யானந்தம் கொண்டங் கிருந்தனை. 31

मन्त्रिण्यम्बाविरचितविषङ्गवधतोषिता ॥

மந்த்ரிண்யம்பா விரசித விஷங்கவத தோஷிதா ॥

விஷங்கனைப் போரில் வீழ்த்திய மந்திரிணீ
சக்தியிடம் சந்தோஷம் நீ கொண்டனை

विशुक्रप्राणहरणवाराहीवीर्यनन्दिता ।

விசுக்ர ப்ராணஹரண வாராஹீ வீர்யநந்திதா ।

விசுக்ரனைப் போரில் வீழ்த்திய வாராஹீ
சக்தியிடம் சந்தோஷம் நீ கொண்டனை. 32

कामेश्वरमुखालोककल्पितश्रीगणेश्वरा ॥

காமேச்வர முகாலோக கல்பித ஸ்ரீ கணேச்வரா ॥

நின் பதி காமேசுவரர் முகம் நோக்கி
தந்தி வதனரை நீ பிறப்பித்தாய்

महागणेशनिर्भिन्नविघ्नयन्त्रप्रहर्षिता ।

மஹாகணேச நிர்பிந்ந விக்நயந்த்ர ப்ரஹர்ஷிதா ।

விக்ந யந்த்ரங்களை வேருடன் பிடுங்கிய
அத்தி முகனைக் கண்டு மெத்தவும் மகிழ்ந்தாய். 33

भण्डासुरेन्द्रनिर्मुक्तशस्त्रप्रत्यस्त्रवर्षिणी ॥

பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ரப்ரத்யஸ்த்ர
வர்ஷிணீ ॥

பண்டன் விடுத்திட்ட அஸ்திரங்களுக்கு பதில்
விடுத்தே கடும் போர் அவனுடன் தொடுத்தாய்

कराङ्गुलिनखोत्पन्ननारायणदशाकृतिः ।

கராங்குளி நகோத்பந்ந நாராயண தசாக்ருதி: |

*அச்சுத நின் தச அவதாரங்களும்*
*நின் கைவிரல் நகங்கள் நின்றே யுதித்தன.* 34

महापाशुपतास्त्राग्निनिर्दग्धासुरसैन्यका ॥

மஹாபாசுபதாஸ்த்ராக்நி நிர்தக்தாஸுர ஸைந்யகா ||

*பாசுபத அஸ்த்ரத்தால் பண்டன் படைகளை*
*ஒக்கவே எரித்தங் கொழித்திட்டனை நீ*

कामेश्वरास्त्रनिर्दग्धसभण्डासुरशून्यका ।

காமேச்வராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாஸுர சூந்யகா |

*காமேச அஸ்த்ரத்தால் சூன்ய புரத்துடன்*
*பண்டனை எறித்த பரையே போற்றி.* 35

ஸ்ரீ தேவி காமனை எழுப்பியது

ब्रह्मोपेन्द्रमहेन्द्रादिदेवसंस्तुतवैभवा ॥

हरनेत्राग्निसंदग्धकामसञ्जीवनौषधिः ।

ப்ரஹ்மோபேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துத
வைபவா ||

ஹரநேத்ராக்நி ஸந்தக்த காமஸஞ்ஜீவநௌஷதி: |

*மாலயன் போற்றிடும் வைபவ முடையாய்!*
*நின்பதி அரனார் நேத்திர விளக்கில்*
*விட்டிலைப் போல் எறிந் தழிந்திட்ட காமனை*
*அமுதம் பொழியும் நின்னருள் நோக்கால்*
*எழும்படி செய்தனை ஈசுவரி! போற்றி* 36

ஸ்ரீ தேவியின் ஸ்ரீ வித்யா மந்த்ரஸ்வரூபம்.

श्रीमद्वाग्भवकूटैकस्वरूपमुखपङ्कजा ॥

कण्ठाधःकटिपर्यन्तमध्यकूटस्वरूपिणी ।
शक्तिकूटैकतापन्नकट्यधोभागधारिणी ॥

ஸ்ரீமத்வாக்பவ கூடைக ஸ்வரூப முகபங்கஜா ||

கண்டாத: கடிபர்யந்த மத்யகூட ஸ்வரூபிணீ ।
ஶக்திகூடைகதாபந்ந கட்யதோபாக தாரிணீ ||

அன்னாய் நின்முகம் வாக்பவகூடம்
அழகிய மார்பே அனங்கனின் கூடம்
கடிமுத லடிவரை சக்தியின் கூடம்

मूलमन्त्रात्मिका मूलकूटत्रयकलेबरा ।

மூலமந்த்ராத்மிகா மூலகூடத்ரய களேபரா ।

காதி மஹாமந் திரம் நின துருவே. 37

மூலமந் திரத்துள முக்கூ டங்களும்
அங்கங்க ளாயவை அமைந்தன நினக்கே
பூர்ண ஹந்தை பாவனை யளித்திடும்
புண்ணிய மூல மந்திரம் நீயே 38

ஸ்ரீ தேவியின் குண்டலினீ ஸ்வரூபம்

कुलामृतैकरसिका कुलसंकेतपालिनी ॥

குலாம்ருதைகரஸிகா குலஸங்கேத பாலிநீ ||

சுழிமுனை நாடியி னமுதினைப் பருகும்
சூக்ஷ்ம சக்தி குண்டலி நீயே
குலவாசாரத்தின் ரகசியம் காப்பாய்

कुलाङ्गना कुलान्तस्था कौलिनी कुलयोगिनी ।

குலாங்கனா குலாந்தஸ்தா கௌலிநீ குலயோகிநீ ।

குலமக ளாகும் சாம்பவீ வித்தை நீ 39

குலத்துள் வஸித்திடும் தேவியும் நீயே
குலங்கள் தோறும் பூஜிப்பர் நினையே

பரையே ஸ்ரீ சக்ர பீடத்தில் கௌலர்
பூஜிப்பர் நின்னை வெளிப்புற மதனில். 40

சக்தி யெனும் குலம் நீயே யாவாய்
சிவனார் தமையே அகுலமென் றுரைப்பர்
குலமாம் சக்தியில் சிவமாம் அகுலம்
கூடிடு மதனைக் கௌலமென் றறிவர். 41

குலத்தில் சேர்ந்தே நீ யிருப் பதனால்
குலயோ கினி நீ யாகுவை போற்றி

अकुला

அகுலா

உடல் வம்சம் முதலாகிய குலங்கள்
ஒன் றுமிலை நினக் ககுலை யாவாய். 42

ஸ்ரீ தேவியாகிய குண்டலினியை ஸமயாசாரர் பூஜிக்கும் முறை

समयान्तस्था समयाचारतत्परा ॥

ஸமயாந்தஸ்தா ஸமயாசார தத்பரா ॥

தஹரா காயத்தில் ஸ்ரீ சக்ர பீடத்தில்
தேவி ஸதாசிவனை பாவனை செய்தே
சக்தி சிவங்களின் ஐவகை ஸாம்யங்கள்
அறிந்தோர் ஸமயா சாரர்க ளாவர். 43

குருவரு ளதனால் உமையே ஸாதகன்
ஐவகை நால்வகை ஐக்யங்க ளறிந்தே
மஹாநவமி யிரவு, வேத தீக்ஷை பெற்று
மண்டல மிட்டுக் குலகுண்டத்திலுறங்கும் 44

குண்டலி யாம் நினை எழுப்பியே நன்கு
கொண்டுவந் தே மணி பூரக மிருத்தி
பாத்யம் முதல் மணி பூஷண மீறாய்
பரிவுட னளித்து அனுஹத மேற்றி. 45

தாம்பூ லாதிகளளித்தங் கிருந்து
திவ்ய விசுத்தியின் சக்கிர மேற்றி

சந்திர கலைகள் போன்ற பணிகளைக்
கொண்டுனை சங்கரி ஸாதக னர்ச்சித்து 46

அக்கினி ஏற்றி நீராஜனம் செய்
தநற்கு மப்பால் ஜகதம்பிகை நின்னை
ஆயிரத் தெட்டிதழ் கமலத்தின் நடுவே
ஆனந்த ஸாகர பிந்துவிலிருக்கும் 47

ஸதாசிவ த்துடனே சேர்த்தே திரையிட்டு
ஸாதகன் வெளியில் காத்தங் கிருந்திட
பரனுடன் ரமித்தே பரவசையாகி
புறம்போந் தமுதைப் பொழிந்தவ னுடைய 48

தேஹத்தை தேஜோ மயமாய்ச் செய்தே
திரும்பியும் பிறவா நிலையதனை யளித்தே
மூல குஹரம் தனி லிறங்கி முன் போல் நீ
மண்டல மிட்டே துயில்வாய் போற்றி, 49

मूलाधारैकनिलया ब्रह्मग्रन्थिविभेदिनी ।
मणिपूरान्तरुदिता विष्णुग्रन्थिविभेदिनी ॥

மூலாதாரைகநிலயா ப்ரஹ்மக்ரந்தி விபேதிநீ ।
மணிபூராந்தருதிதா விஷ்ணுக்ரந்தி விபேதிநீ ॥

மூலா தாரத்துக் குண்டலி நீயே
விழித்தங்கு முறிப்பாய் விதியின் கிரந்தியை
மணிபூ ரகமதி லெழும்பி நீ வருவாய்
மாலின் கிரந்தியை அறுத்தங் கெறிவாய். 50

ஸ்ரீ பரானந்தஸிந்துவில் முதல் தரங்கம் முற்றிற்று.



## ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

### இரண்டாவது தரங்கம்.

[V. R. லக்ஷ்மி அம்மாள்]

आज्ञाचक्रान्तरालस्था रुद्रग्रन्थिविभेदिनी ।
सहस्रारांबुजारूढा सुधाधाराभिवर्षिणी ॥

ஆக்ஞாசக்ராந்தராளஸ்தா ருத்ரக்ரந்திவிபே
ஸஹஸ்ராராம்புஜாரூடா *ஸுதாதாராபிவர்ஷிணீ ॥

*ஆக்கினையில் ருத்ரக் கிரந்தியை உடைப்பாய்*
*அப்பால் பிர்ம்ம ரந்திரம் பாய்வாய்*
*ஆயிரத் தெட்டிதழ்க் கமலத்தில் ஏறி*
*அமுதினைப் பொழியும் குண்டலி நீயே.* 51

तडिल्लतासमरुचिः षट्चक्रोपरि संस्थिता ।
महासक्तिः कुण्डलिनी बिसतन्तुतनीयसी ॥

தடில்லதா ஸமருசி: ஷட்சக்ரோபரி ஸம்ஸ்திதா ।
மஹாஸக்தி: குண்டலிநீ பிஸதந்து தநீயஸீ ॥

*மின்னற் கொடிபோல் மின்னொளி இருக்கும்*
*அன்னை ஆறுசக் கிரங்களுக் கப்பால்*
*நின்னிரு அடிக்கம லங்கள் இருக்கும்*
*புண்ணிய சிவத்தைப் புணர விரும்புவை.* 52

*ஜீவ கலைஎனும் குண்டலி நீயே*
*ஸூக்ஷ்மத் தாமரை நூல்போல் இருப்பாய்*

भवानी

பவாநீ

*பவமாம் கடலின் கரைசேர்த் தடியரை*
*பரிவுடன் காத்திடும் பவானி போற்றி* 53

**ஸ்ரீ தேவியின் கருணைவடிவு**

भावनागम्या भवारण्यकुठारिका ।
भद्रप्रिया भद्रमूर्तिर्भक्तसौभाग्यदायिनी ॥

---

*ஸுதாஸாராபிவர்ஷிணீ என்று பாடாந்தரம்.

பாவநாகம்யா பவாரண்யகுடாரிகா ।
பத்ரப்ரியா பத்ரமூர்த்திர் பக்தஸௌபாக்யதாயிநீ ॥

பாவனை ஒன்றே நினை அடை யும்வழி
பவவனம் வெட்டும் மழுவது நீயே
ஸந்ததம் மங்களப் பிரியைநீ ஆகுவை
சிவையே மங்கள உருவே போற்றி. 54

அடியார்க் கெல்லா ஸௌபாக் கியங்களும்
அளித்திடு வாய்நீ கணத்தினில் போற்றி

भक्तिप्रिया भक्तिगम्या भक्तिवश्या भयापहा ।
பக்திப்ரியா பக்திகம்யா பக்திவச்யா பயாபஹா ।

அன்பெனும் அதுவே நினைமகிழ் விக்கும்
அன்பே நினைஅடைந் திடும்வழி ஆகும். 55

அன்பெனும் அதற்கே நீவசப் படுவாய்
அகற்றிப் பயங்களை அனுக்ரஹம் செய்வாய்

शांभवी शारदाराध्या शर्वाणी शर्मदायिनी ॥
ஶாம்பவீ ஶாரதாராத்யா ஶர்வாணீ ஶர்மதாயிநீ ॥

சம்பு மனோஹரி சாம்பவி போற்றி
சாம்பவ தீக்ஷையின் உருவே போற்றி 56

சாரதை யும்பணிந் திடும்திரு வடியாய்
சர்வா ணீ ஜக தீசுவரி போற்றி
சாமம் எனும்பிரம சுகத்தினை அளிப்பாய்

शांकरी श्रीकरी साध्वी शरच्चन्द्रनिभानना ।
शातोदरी शान्तिमती

ஶாங்கரீ ச்ரீகரீ ஸாத்வீ ஶரச்சந்த்ரநிபாநநா ।
ஶாதோதரீ ஶாந்திமதீ

சங்கரி ஸ்ரீகரி ஸாத்வியே போற்றி 57
சரச்சந் திரன்என நின்முகம் விளங்கும்
சிறியகைத் தலம்போல் நின்வயி றிருக்கும்

சாந்தி மிகஉள சக்தியே போற்றி
திவ்விய வடிவுடைத் தேவியே போற்றி. 58

ஸ்ரீதேவியின் ஸாதார நிராதார பூஜை

निराधारा

நிராதாரா

ஷட்சக் கரங்களில் குண்டலி யாம்நினை
அருச்சித் தல்ஸா தாரபூ ஜையாம்
சுத்தஸம் வித்தாம் நின்னுடன் ஐக்யம்
பெற்றிடில் நிராதா ரபூஜை யாகும். 59

ஸ்ரீதேவியின் நிர்குண ரூபம்

निरञ्जना ॥

निर्लेपा निर्मला नित्या निराकारा निराकुला ।

நிரஞ்ஜநா ॥

நிர்லேபா நிர்மலா நித்யா நிராகாரா நிராகுலா ।

மும்மலம் என்பது நின்னிடத் தில்லை
கர்மபந் தம்நினக் கில்லவே இல்லை
நிர்மல ரூபிநீ நித்தியை ஆவாய்
உருவமே இல்லா ஸம்வித் தாவாய். 60

அக்ஞா னத்தின் கலக்கம் நினக்கில்லை

निर्गुणा निष्कला शान्ता निष्कामा निरुपप्लवा ॥

நிர்குணா நிஷ்கலா ஶாந்தா நிஷ்காமா நிருபப்லவா ॥

முக்குணங் களும் நின் முன்னே நில்லா
கலையெனும் ஜீவ அம்சம் நினக்கில்லை
கருணையும் சாந்தியும் உடையாய் போற்றி. 61

அடைய விரும்பும் ஆசை நினக்கில்லை
அழிவென் பதுநினக் கில்லவே இல்லை

नित्यमुक्ता निर्विकारा निष्प्रपञ्चा निराश्रया ।

நித்யமுக்தா நிர்விகாரா நிஷ்ப்ரபஞ்சா நிராச்ரயா ।

முக்கா லத்திலும் பந்தமே இல்லா
சக்திநீ காம க்ரோதம் இலாதாய். 62

சுத்தப் பரப்பிர்ம்ம ரூபி நின்னிடை
சற்றும்இப் பிரபஞ்சத் தோற்றமே இல்லை
நினையா சிரயித்தே உலகங்கள் இருக்கும்
நினக்காச் ரயம்இலை எனமறை மொழியும். 63

नित्यशुद्धा नित्यबुद्धा निरवद्या निरन्तरा ॥

நித்யசுத்தா நித்யபுத்தா நிரவத்யா நிரந்தரா ॥

எப்பொழு தும்பரி சுத்தப் பொருள்நீ
எப்பொழு தும்விழித் திருக்கும் அருள்நீ
எத்தனை பாபம் செயினும் நின்னட
பற்றிடில் நரகம் அவாக்கிலை ஆகும். 64

இடைவெளி இன்றி எங்கும் நிறைந்த
பரம்பொருள் நீஎனப் பகரும் மறைகள்

निष्कारणा निष्कलङ्का निरुपाधिर्निरीश्वरा ।

நிஷ்காரணா நிஷ்களங்கா நிருபாதிர் நிரீச்வரா ।

காரணம் எதற்கும் நீயே ஆவாய்
நினக்கிலை காரணம் சிவத்துடன் நிற்பாய். 65

களங்கம் இலாத சிதாகா சம்நீ
கண்டம் அகண்டம் எனஇரு வகையாம்
உபாதி இலாத நிரீசுவரீ போற்றி

नीरागा रागमथनी निर्मदा मदनाशिनी ॥

निश्चिन्ता निरहंकारा निर्मोहा मोहनाशिनी ।

நீராகா ராகமதநீ நிர்மதா மதநாசிநீ ॥

நிச்சிந்தா நிரஹங்காரா நிர்மோஹா மோஹநாசிநீ ।

உனக்கிலை இச்சை இச்சையை ஒழிப்பாய். 66
மதமற் றவள்நீ மதநா சினிநீ
மனக்கவ லையிலா நிரஹங் காரீ
மோஹம் இலாதவள் மோஹம் ஒழிப்பவள்

निर्ममा ममताहन्त्री निष्पापा पापनाशिनी ॥

நிர்மமா மமதாஹந்த்ரீ நிஷ்பாபா பாபநாசினீ ॥

பேதம் காட்டும் மமதை இலாதவள். 67

பக்தர் மமதையை அகற்றும் மஹேசி
அற்பமும் பாபம் இலாச்சிவ சங்கரீ
உலகினை எல்லாம் கொன்றிட்ட பாபமும்
ஓர்முறை நின்னைத் தொழுதிடில் தீரும். 68

निष्क्रोधा क्रोधशमनी निर्लोभा लोभनाशिनी ।

நிஷ்க்ரோதா க்ரோத ஶமநீ நிர்லோபா லோபநாஶிநீ ।

அற்பமும் கோபம் நினக்கிலை ஆகும்
அடியார் கோபத்தை ஒழிப்பவ ளும்நீ
லோபம்அற் றவளநீ லோபத்தை ஒழிப்பாய்
தேவிநீ பக்தரை தயவுடன் காப்பாய் 69

निःसंशया संशयघ्नी निर्भवा भवनाशिनी ॥

निर्विकल्पा निराबाधा निर्भेदा भेदनाशिनी ।

நிஸ்ஸம்ஶயா ஸம்ஶயக்நீ நிர்பவா பவநாஶிநீ ॥

நிர்விகல்பா நிராபாதா நிர்பேதா பேத நாஶிநீ ।

சங்கை அற்றவள்நீ சங்கையை ஒழிப்பாய்
பவம்அற றவள்நீ பவநா சினிநீ
பரையே சற்றும் விகல்பம் நினக்கிலை
பாதிக்க ஒண்ணுப் பிர்மமே போற்றி. 70

பரனுக் கும்நினக் கும்பேதம் இல்லை
பேதமே அக்ஞா னம்அதை ஒழிப்பாய்

निर्नाशा मृत्युमथनी निष्क्रिया निष्परिग्रहा ॥

निस्तुला नीलचिकुरा निरपाया निरत्यया ।

நிர்நாஶா மிருத்யுமதநீ நிஷ்க்ரியா நிஷ்பரிக்ரஹா ॥

நிஸ்துலா நீலசிகுரா நிரபாயா நிரத்யயா ।

அழிவற்ற ஸத்திய ஞானம் அனந்தம்
எனமறை போற்றும் பிர்மம்நீ ஆகும். 71

மிருத்யுவை அழித்தே பக்தரைக காப்பாய்
நிஷ்க்ரியை உள்ளவள் நீயே ஆவாய்

அன்னாய் காந்தத் தின்முன் அயம்போல்
ஸன்னதி மாத்திரத் தால்ஜகம் சுழலும் 72

நிகிர ஹிக்கும் பொருள்ஒன்று மேஇலை
நினக்குச் சமானம் ஒருவரும இல்லை
நிலகுந் தலம்உள அன்னாய் அபாயம்
நினக்கிலை வரம்பைக் கடவா மங்கைநீ. 73

दुर्लभा दुर्गमा दुर्गा दुःखहन्त्री सुखप्रदा ॥

துர்லபா துர்கமா துர்கா துக்கஹந்த்ரீ ஸுகப்ரதா

யோகிக ளுக்கும்நீ அரியவள் ஆவாய்
ஆமோ எளிதில் நினை அறி வதுதான்
துர்க்கனைக் கொன்ற துர்க்கையே போற்றி
துக்கம் துடைப்பாய் சுகத்தினை அளிப்பாய். 74

दुष्टदूरा दुराचारशमनी दोषवर्जिता ।
सर्वज्ञा सान्द्रकरुणा समानाधिकवर्जिता ॥

துஷ்டதூரா துராசாரஶமநீ தோஷவர்ஜிதா ।
ஸர்வஜ்ஞா ஸாந்த்ரகருணா ஸமாநாதிகவர்ஜிதா ॥

துஷ்டருக் கென்றும் தூரத் திருப்பாய்
கெட்ட செயல்களை வேறுடன் அழிப்பாய் .
தோஷம் இலாப்பர மேசுவரி போற்றி
ஸர்வமும் அறிந்திடும சிவையே போற்றி. 75

எல்லையில் லாக்ருபை உள்ளவள் நீயே
ஈசுவரீ ஒப்புயர் வற்றவள் நீயே

सर्वशक्तिमयी सर्वमङ्गला

ஸர்வஶக்திமயீ ஸர்வமங்களா

சக்திகள் அனைத்தும் நின்னிடத் தடங்கும்
ஸர்வ சுபங்களும் நின்னால் பெருகும். 76

## மூன்றுவது தரங்கம்.

सद्गतिप्रदा ।
सर्वेश्वरी सर्वमयी सर्वमन्त्रस्वरूपिणी ॥
सर्वयन्त्रात्मिका सर्वतन्त्ररूपा मनोन्मनी ।

ஸத்கதிப்ரதா ।
ஸர்வேச்வரீ ஸர்வமயீ ஸர்வமந்த்ரஸ்வரூபிணீ ॥
ஸர்வயந்த்ராத்மிகா ஸர்வதந்த்ரரூபா மனோன்மநீ ।

பக்தற் கிஹபர போகங்க ளளித்தே
முக்தியும் அருளும் சக்தியே போற்றி
ஸர்வே சுவரிசிவ சங்கரி போற்றி
ஷடத்வ மயவடி வுடையாய் போற்றி. 77

மந்திர மனைத்தும் நீயேயாகும்
யந்திரம் அனைத்தும் நின்னுரு ஆகும்
தந்திரம் அனைத்தும் அங்கங்கள் நினக்கே
சம்புஸ தாசிவ மஹிஷியே போற்றி. 78

காலம் கடந்த மனோன்மணி போற்றி
கண்ணிமைப் பின்றிஉள் நாட்ட முடனே
சலியா மனத்துடன் அசையா உருவுடன்
ஸமாதியில் யோகியர் இருந்திடும் நிலைநீ. 79

माहेश्वरी महादेवी महालक्ष्मीर्मृडप्रिया ॥
महारूपा महापूज्या महापातकनाशिनी ।

மாஹேச்வரீ மஹாதேவீ மஹாலக்ஷ்மீர் ம்ருடப்ரியா ॥
மஹாரூபா மஹாபூஜ்யா மஹாபாதகநாசிநீ ।

ப்ரகிருதியின் முக்குணம் கடந்தே நிற்பாய்
பரனின் சக்தி மஹேசுவரி ஆவாய்
மாப்பெருந் தேவி நீயே போற்றி
மாலின் பத்தினி மஹாலக்ஷ்மி போற்றி. 80

முக்தி சுகந்தனை அருளும் சிவனின்
பத்தினி யாம்பரா சக்தியே போற்றி
ப்ரகிருதி முதலா நால்வகை உருக்களுக்
கப்பால் நின்னுரு வாகும் பெரிதாய் 81

ஹரிபிர் மாதிம ஹேசுவர ரும்பணிந்
தடியிணை யற்சிக்கும் அம்பிகை போற்றி. 82

பிரம்ம ஹத்திமுத லாம்பெரும் பாபங்கள்
புரிந்திடி னும்நின் திருமந் திரமாம்
பஞ்சத சாக்ஷரீ மனுவிணை யோர்முறை
படித்திடில் அவரைப் பரிசுத்தம் ஆக்குவை. 83

महामाया महासत्त्वा महाशक्तिर्महारतिः ॥
महाभोगा महैश्वर्या महावीर्या महाबला ।

மஹாமாயா மஹாஸத்வா மஹாஶக்திர் மஹாரதி: ॥
மஹாபோகா மஹைச்வர்யா மஹாவீர்யா மஹாபலா ।

மிகவும் உணர்ந்த ஞானிகள் உளத்தையும்
மெத்த மயக்கும் மாப்பெரும் மாயைநீ
நின்பலம் அமரரில் ஒருவற்கும் இலையே
நீஎழு தொழில் இயற் றிடுவாய் அம்மே! 84

மிக்கவும் ரமிப்பாய் மிகுசுகம் புசிப்பாய்
மேலாம் ஈச விபூதிகள் உடையாய்
மிகுதியும் வீரிய பராக்ரமம் உடைய
மஹாபலம் உள்ள மஹேசுவரி போற்றி. 85

महाबुद्धिर्महासिद्धिर्महायोगेश्वरेश्वरी ॥
महातन्त्रा महामन्त्रा महायन्त्रा महासना ।

மஹாபுத்திர் மஹாஸித்திர் மஹா யோகேச்வரேச்வரீ ॥
மஹாதந்த்ரா மஹாமந்த்ரா மஹாயந்த்ரா மஹாஸநா ।

ஆத்மக் ஞானம் அளிக்கும் புத்திநீ
அணிமா முதலிய அஷ்டஸித் திகள்நீ
அரும்பெரும் யோகி சுவரர்க்கும் ஈசுவரீ
அன்னுய் மாப்பெரும் தந்த்ர ஸ்வரூபிநீ. 86

அரிதா கியபல மந்த்ரம் நீயே
அற்புத ஸ்ரீசக்ர யந்த்ரமும் நீயே 87

பஞ்ச தசாக்ஷரீ மந்த்ரமே மந்த்ரம்
பரையே ஸ்ரீசக்ர யந்த்ரமே யந்த்ரம்
பரன்முத லவனி வரையுள தத்வம்
பகவதி நினக்கவை ஆஸனம் ஆகும் 88

महायागक्रमाराध्या महाभैरवपूजिता ॥

மஹாயாக க்ரமாராத்யா மஹாபைரவ பூஜிதா ॥

பாவனை உபநிட துரைத்திடும் வண்ணம்
பரையே அந்தர் முகந்தனில் உணர்ந்தே
பக்தி யுடன்நினை மிகப்பெரும் மகத்தால்
பஜித்திடு வோர்சிவ யோகியர் ஆவர். 89

மாதிரு தேவிகள் ஆகிய எண்மரின்
அம்சம்என் றுரைக்கும் அக்ஷோப் யாதி
சக்திகள் அறுபத்து நான்கிவர் பூஜையே
அற்புத மாப்பெரும் யக்ஞம தாகும். 90

இப்பெரும் மகத்தால் நினைவழி பட்டால்
இச்சித்த அனைத்தும் தக்ஷணம் பெறுவர்
தப்பிலை எனவே ஆகமம் எல்லாம்
செப்பிடும் சிவையே சங்கரீ போற்றி. 91

பரையே பைரவ மூர்த்தியும் கரத்தில்
பக்தி யுடன் ஜப மாலையை வஹித்தே
நியாஸங்கள் செய்துன் திருமந் திரம் அதை
நித்தமும் ஜபித்தே மெத்தவும் மகிழ்வர். 92

சித்தெனும் அக்கினி குண்டத்தி லிருந்தே
ஸ்ரீசம்பு நாதரால் வெளிவந் தனைநீ 93

महेश्वरमहाकल्पमहाताण्डवसाक्षिणी ।
महाकामेशमहिषी महात्रिपुरसुन्दरी ॥

மஹேச்வர மஹாகல்ப மஹாதாண்டவ ஸாக்ஷிணீ ।
மஹாகாமேச மஹிஷீ மஹாத்ரிபுரஸுந்தரீ ॥

ஸர்வமும் அழித்தே கல்ப முடிவினில்
சங்கரர் தாண்டவம் ஆடியே களிப்பர்
ஒருத்திநீ தானே கண்டதை மகிழ்வாய்
உமையே ஸர்வ ஸாக்ஷிணீ நீயே. 94

அம்மை மஹாகா மேசுவர மஹிஷீ
ஆரியை ஸ்ரீமஹா த்ரிபுரஸுந் தரிநீ
மாதா மானம் மேயம் எனும்முப்
புரங்களின் அழகால் த்ரிபுரஸுந் தரிநீ 95

चतुःषष्ट्युपचाराढ्या चतुःषष्टिकलामयी ।
महाचतुःषष्टिकोटियोगिनीगणसेविता ॥
मनुविद्या चन्द्रविद्या चन्द्रमण्डलमध्यगा ।

சதுஷ்ஷஷ்ட்யுபசாராட்யா சதுஷ்ஷஷ்டிகலாமயீ ।
மஹாசதுஷ்ஷஷ்டி கோடி யோகிநீகண ஸேவிதா ॥
மனுவித்யா சந்த்ரவித்யா சந்த்ரமண்டல மத்யகா ।

அறுபத்து நான்கு உபசா ரங்களால்
அடியர் உனைஆ ராதித்து மகிழ்வர்
அறுபத்து நான்குயா கலைகளும் நீயே
அயன்அரி பணியும் சிவையே போற்றி 96

சங்கரி நீமிக எழிலுடன் அமர்ந்த
ஸ்ரீசக்ர ராஜ பீடத்தில் இருக்கும்
அக்ஷோப் யாதிசக் திகள்அம் சங்கள்
ஆகும் அறுபத்து நான்கு கோடிகள். 97

யோகினி கள்உளர் அனைவரும் நினையே
ஏற்றிடச் சிவையே நீயிருந் திடுவாய்
மனுவின் வித்தைநீ மதியின் வித்தைநீ
மதியின் மண்டல மத்தியில் இருப்பாய் 98

ஸோமனின் சிரஸில் நீயிருந் திடுவாய்
சிவனார் அக்கினிச் சிரசினில் இருப்பர்.
அக்கினிஸோ மத்தின் வடிவே ஜகத்தாம்
அதனால் ஜகம்சிவ சக்தியின் உருவாம். 99

चारुरूपा चारुहासा चारुचन्द्रकलाधरा ॥
चराचरजगन्नाथा चक्रराजनिकेतना ।

சாருரூபா சாருஹாஸா சாருசந்த்ர கலாதரா ॥
சராசர ஜகந்நாதா சக்ரராஜ நிகேதநா ।

ஸௌந்தர ரூபி ஸௌந்தர நகையாள்
ஸௌந்தர வான்பிறை சூடிய சிரத்தாள்
சராசரம் ஆகிய ஜகங்களுக் கெல்லாம்
நாயகி ஸ்ரீசக்ர நாயகி போற்றி. 100

पार्वती पद्मनयना पद्मरागसमप्रभा ॥
पञ्चप्रेतासनासीना पञ्चब्रह्मस्वरूपिणी ।

பார்வதீ பத்மநயநா பத்மராக ஸமப்ரபா ॥
பஞ்ச ப்ரேதாஸநாஸீநா பஞ்ச ப்ரஹ்ம ஸ்வரூபிணீ ।

*பனிமலை புத்ரீ பங்கஜ நேத்ரீ*
*பதுமரா கம்என ஒளியுள காத்ரீ*
*பஞ்ச ப்ரேதா ஸனமதில் அமரும்*
*பரசக்தி சின்மயி பகவதி போற்றி.* 101

*அயனரி ருத்திரன் ஈச ஸதாசிவன்*
*ஐவரும் நின்னருள் சக்தியை அடைந்தே*
*ஐவகைத் தொழில்களை இயற்றுவர் நின்னருள்*
*பெற்றில ரேல்இவர் பிணமே ஆகுவர்.* 102

*நிர்மல மாம்பரப் பிர்ம்மமே ஆவாய்*
*நீயே மாயா லீலையின் பொருட்டாய்*
*அயனரி ருத்திரன் ஈசன் ஸதாசிவன்*
*ஐவரின் உருவாய் ஆனாய் போற்றி.* 103

चिन्मयी परमानन्दा विज्ञानघनरूपिणी ॥
ध्यानध्यातृध्येयरूपा धर्माधर्मविवर्जिता ।

சின்மயீ பரமாநந்தா விஜ்ஞான கநரூபிணீ ॥
த்யாந த்யாத்ரு த்யேயரூபா தர்மாதர்ம விவர்ஜிதா ।

*சின்மய ரூபீ பரமா னந்தா*
*சிறந்தவிக் ஞான கனரூ பிணிநீ*
*த்யான, த்யாத்ரு த்யேய த்ரிபுடீ*
*தர்மா தர்மங்கள் அற்றனை போற்றி.* 104

**ஸ்ரீ பரமேசுவரியின் வியஷ்டி ஸமஷ்டி வடிவ விசுவவைசுவானரஸ்வரூபம்.**

विश्वरूपा जागरिणी स्वपन्ती तैजसात्मिका ॥

விச்வரூபா ஜாகரிணீ ஸ்வபந்தீ தைஜஸாத்மிகா ॥

*வியஷ்டியில் விழிப்பபி மானீ விசுவநீ*
*விசுவ ஸமஷ்டியில் வைசுவா னரன்நீ*
*தூலத்தில் விழிப்புள ஜாகர நிலைநீ*
*நிலையே அரன்மகிழ் உமையே போற்றி.* 105

ஸூக்ஷ்மதேஹத்தில் சொப்பனம் கண்டிடும்
தைஜஸன் என்றிடும் ஜீவனும் நீயே
எல்லாத் தைஜஸ ஸமஷ்டியே ஆகும்
ஈசுவரி ஹிரண்ய கர்ப்பனும் நீயே. 106

सुप्ता प्राज्ञात्मिका तुर्या सर्वावस्थाविवर्जिता ।

ஸுப்தா ப்ராஜ்ஞாத்மிகா துர்யா ஸர்வாவஸ்தா
விவர்ஜிதா ।

ஒன்றையும் அறியாது உறங்கும் ஸுஷுப்தி நீ
உமையே ப்ராக்ஞன் எனும்ஜீவனும் நீ
ப்ராக்ஞர் அனைவரின் ஸமஷ்டி என்றுரைக்கும்
பெரிதாம் அந்தர் யாமியும் நீயே. 107

இன்னிலை மூன்றும் அறஒழிந் திடுங்கால்
இன்பம் உதிக்கும் துரியமும் ஆவாய்
அவஸ்தைகள் நான்கும் கடந்தப் பால்உள
அத்வைதப் பிர்மமும் நீயே போற்றி. 108

ஸ்ரீபரமேசுவரியின் பஞ்சக்ருத்யங்களும் பஞ்சபிர்மஸ்வரூபமும்.

सृष्टिकर्त्री ब्रह्मरूपा गोप्त्री गोविन्दरूपिणी ॥
संहारिणी रुद्ररूपा तिरोधानकरीश्वरी ।
सदाशिवानुग्रहदा पञ्चकृत्यपरायणा ॥

ஸ்ருஷ்டி கர்த்ரீ ப்ரஹ்மரூபா கோப்த்ரீ கோவிந்த
ரூபிணீ ॥
ஸம்ஹாரிணீ ருத்ரரூபா திரோதானகரீச்வரீ ।
ஸதாஶிவாநுக்ரஹதா பஞ்சக்ருத்ய பராயணா ॥

ஜகங்களைப் படைப்பாய் அயன்உரு எடுப்பாய்
சீருடன் காப்பாய் மால்உரு எடுப்பாய்
ஒக்கவே எறிப்பாய் உருத்திரன் ஆகி
மறைப்பாய் ஈசனின் வடிவுடன் நிற்பாய். 109

ஐயன் ஸதாசிவன் வடிவுடன் இருப்பாய்.
அறுத்தே பந்தத்தை அனுக்ரஹம் செய்வாய்
பஞ்சக்ருத் யங்களைப் புரியும் சக்தி நீ
பானுவின் மண்டல மத்தியில் இருப்பவள். 110

भानुमण्डलमध्यस्था भैरवी भगमालिनी ।
पद्मासना भगवती पद्मनाभसहोदरी ॥

பாநுமண்டல மத்யஸ்தா பைரவீ பகமாலிநீ ।
பத்மாஸநா பகவதீ பத்மநாப ஸஹோதரீ ॥

பைரவ ரூபி பகமா லினி நீ
பதும மலர்மீ தமர்ந்துடன் இருப்பாய்
பகவதி பத்ம நாபரின் ஸோதரி
பக்தரைக் காத்திடும் சக்தியே போற்றி. 111

उन्मेषनिमिषोत्पन्नविपन्नभुवनावली ।
सहस्रशीर्षवदना सहस्राक्षी सहस्रपात् ॥

आब्रह्मकीटजननी वर्णाश्रमविधायिनी ।
निजाज्ञारूपनिगमा पुण्यापुण्यफलप्रदा ॥

श्रुतिसीमन्तसिन्दूरीकृतपादाब्जधूलिका ।

உந்மேஷ நிமிஷோத்பந்ந விபந்ந புவநாவளீ ।
ஸஹஸ்ர ஶீர்ஷ வதநா ஸஹஸ்ராக்ஷீ ஸஹஸ்ரபாத் ॥

ஆப்ரஹ்ம கீடஜநநீ வர்ணாச்ரம விதாயிநீ ।
நிஜாஜ்ஞாரூப நிகமா புண்யாபுண்ய பலப்ரதா ॥

ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீக்ருத பாதாப்ஜதூளிகா ।

பரையே நின்விழி திறத்தல் மூடலால்
புவனத்தின் கோடிகள் தோன்றியே மறையும்
ஆயிரம் சிரங்களும் முகங்களும் உடையாய்
ஆயிரம் அழகிய விழிமலர் உடையாய் 112

ஆயிரம் பாதங்கள் நினக்குள என்பர்
அயன்முதல் கீடம் வரையிலும் ஈன்றனை
நால்வகை வர்ண சிரமங்களை அமைத்தாய்
நான்மறைகள் நின தாக்கினை ஆகும். 113

புண்ணிய பாபங்கள் ஆகும் கர்மப்
பயன்களை ஜீவர்க் களிப்பவள் நீயே
சுருதி எனும் மங் கையர் நின் னடிப்பொடி
எடுத்தவர் வகுட்டில் தரித்துனைத் துதிப்பர். 114

सकलागमसन्दोहशुक्तिसंपुटमौक्तिका ॥
पुरुषार्थप्रदा पूर्णा भोगिनी भुवनेश्वरी ।
अम्बिकाऽनादिनिधना हरिब्रह्मेन्द्रसेविता ॥

ஸகலாகம ஸந்தோஹ ஶுக்தி ஸம்புட மௌக்திகா ॥

புருஷார்த்தப்ரதா பூர்ணா போகிநீ புவநேச்வரீ ।
அம்பிகாZநாதிநிதநா ஹரிப்ரஹ்மேந்த்ரஸேவிதா ॥

ஸர்வா கமம்எனும் சிப்பியின் உள்ளில்
சிறந்தமுத் தெனநீ இருந்தனை போற்றி
நால்வகைப் புருஷார்த் தங்களை ஜீவர்க்கு
நல்கிடும் ஸ்ரீபர மேசுவரி போற்றி. 115

பூரணமாய் எங்கும் நிறைந்தே நிற்பாய்
பகவதி போகம் அனைத்தையும் புசிப்பாய் 116

புவனேச்சு வரிநீ புவனத்தை ஈன்றவள்
பரையே இச்சை ஞானம் க்ரியைஎனும்
சக்திகள் மூவரும் நீயே இவரின்
ஸமஷ்டி எனும்ஸ்ரீ அம்பிகை நீயே. 117

ஆதியும் அந்தமும் இல்லாப் பரம்பொருள்
அதுவே நீயென அருமறை புகலும்
தேவி அயன்திரு மாலுடன் ருத்ரனும்
திருவடி பணியும் பெருமையை உடையாய். 118

नारायणी नादरूपा नामरूपविवर्जिता ।

நாராயணீ நாதரூபா நாமரூபவிவர்ஜிதா ।

நாரணன் ஸோதரி நாரணி போற்றி
நாதத்தின் ஒன்பது பேதங்கள் ஆகும்
பிந்து அர்த்தமதி ரோதினி நாதம்
நாதாந்தம் சக்தி வயாபினி ஸமனை 119

உன்மனி எனவே ஆகமம் உரைக்கும்
உமையே கோடி ரவிஒளி வீசும்
நாதத்தின் உருவே சிவையே நாம
ரூபம் இலாஸச் சிதானந் தம்மே! 120

**ஸ்ரீ பரானந்த ஸிந்துவின் மூன்றாவது தரங்கம் முற்றிற்று.**

## நான்காவது தரங்கம்.

ह्रींकारी ह्रीमती हृद्या हेयोपादेयवर्जिता ॥

ஹ்ரீங்காரீ ஹ்ரீமதீ ஹ்ருத்யா ஹேயோபாதேய
வர்ஜிதா ॥

ரஹஸிய மாகிய ஹ்ரீம்பீ ஜம்நீ
நாரியற் கணியாம் லஜ்ஜை வடிவுநீ
மாயோ இயரின் மனத்திடை நிற்பாய்
தாயே தள்ளலும் கொள்ளலும் அற்றாய். 121

राजराजार्चिता राज्ञी रम्या राजीवलोचना ।
रञ्जनी रमणी रस्या रणत्किङ्किणिमेखला ॥

रमा राकेन्दुवदना रतिरूपा रतिप्रिया ।
रक्षाकरी राक्षसघ्नी रामा रमणलम्पटा ॥

ராஜராஜார்சிதா ராஜ்ஞீ ரம்யா ராஜீவலோசநா ।
ரஞ்ஜநீ ரமணீ ரஸ்யா ரணத்கிங்கிணிமேகலா ॥

ரமா ராகேந்துவதநா ரதிரூபா ரதிப்ரியா ।
ரக்ஷாகரீ ராக்ஷஸக்நீ ராமா ரமணலம்படா ॥

ராஜரா ஜர்எனும் மனுமுதல் ஆனோர்
நாடிநின் பதமலர் தேடியே தொழுவர்
ராஜேசு வரிசிவ காமேச் வரரின்
ராக்ஞி என்ற பட்ட மஹிஷியே ! 122

ரம்மியம் ஆகிய உருவினை உடையாய்
ராஜீ வங்களை நிகர்விழி உடையாய்
பக்தர் மனத்தினைக் களித்திடச் செய்வாய்
பளிங்காம் சிவத்தில் சிவந்தநின் ஒளிதான் 123

மிக்க மனோஹரம் ஆய்அது வீசும்
மாட்சிமை யைப்பெறும் யோகிகள் காண்பர்
அடியவர் நின்னால் மிகுதியும் ரமிப்பர்
அன்னாய் நினைமிக இனிப்பாய் ருசிப்பர் 124

பரையே ஒலித்திடும் கிங்கிணி மேகலை
பரிவுடன் தரித்தாய் ரமை உரு எடுத்தாய்
பூரண சந்திரன் போல்முகம் உடையாய்
புகழ்உள ரதியின் உருவினைக் கொள்வாய் 125

அனங்கன் பத்தினி மீதன் புடையாய்
அடிதொழும் அன்பர்க் கபயமே அளிப்பாய்
அரக்கரை வதைத்திடும் அன்னாய் உலகில்
ஆண்பெண் எனஇரு வகையாம் ஜீவரில் 126

ஆண்கள் அனைவரும் அரன்உரு ஆவர்
அம்மை நின் உருவே பெண்கள்எல் லோரும்
பெண்மையால் அரனைப்புணர விரும்புவை
பரையே முமுக்ஷு விரும்பும் பொருள் நீ 127

काम्या कामकलारूपा कदम्बकुसुमप्रिया ।
कल्याणी जगतीकन्दा करुणारससागरा ॥

कलावती कलालापा कान्ता कादम्बरीप्रिया ।
वरदा वामनयना वारुणीमदविह्वला ॥

காம்யா காமகலாரூபா கதம்பகுஸுமப்ரியா ।
கல்யாணீ ஜகதீகந்தா கருணாரஸஸாகரா ॥

கலாவதீ கலாலாபா காந்தா காதம்பரீப்ரியா ।
வரதா வாமநயநா வாருணீமதவிஹ்வலா ॥

பானுவின் மண்டலம் நின்முகம் ஆகும்
பனிமதி அக்கினி மண்டலம் இரண்டும்
நின்னிரு குசங்கள் இவற்றினுக் கடியில்
யோனியாய் ஹார்த்த கலையது இருக்கும் 128

ஸத்குரு அருளால் காம கலைஇதைத்
தெரிந்தோர் பூர்ண ஹந்தையைப் பெறுவர்
கதம்ப மலர்களை மிக்க விரும்புவை
கல்யாணீ ஜகம் எங்கிலும் இருப்பாய். 129

கருணா ஸாகர தேவிநீ ஆகும்
கலைகள் அனைத்தும் நின்னிடம் இருக்கும்
கலைகளை உரைப்பாய் அழகுடன் இருப்பாய்
கதம்ப மலர்களின் மதுவைக் குடிப்பாய், 130

பக்தர் விரும்பும் வரங்களை நின்இரு
பாதங்க ளேவெகு விரைவில் அளித்திடும்
வெகுஅழ காய்உள நேத்திரம் உடையாய்
வாருணி மதுவின் மதத்தினை உடையாய் 131

विश्वाधिका वेदवेद्या विन्ध्याचलनिवासिनी ।
विधात्री वेदजननी विष्णुमाया विलासिनी ॥

விசுவாதிகா வேதவேத்யா விந்த்யாசலநிவாஸிநீ
விதாத்ரீ வேதஜனநீ விஷ்ணுமாயா விலாஸிநீ.

விசுவம் அனைத்தும் கடந்தே நிற்பாய்
வேதங்கள் குறிக்கும் பாதங்கள் உடையாய்
விந்த்யா சலம் அதில் வசித்திடும் தேவி
வேதா உருவினைக் கொண்ட மட 132

முக்கோ ணம்என உருவினை உடைய
மூலகுண் டலியாம் நின்னிடம் இருந்தே
உயிர்மெய் எனஇரு வகைஎழுத் தெல்லாம்
உதித்தன எனவே ஆகமம் உரைக்கும். 133

வியாபித்து நிற்கும் விஷ்ணுவி னையுமோர்
வரையரைக் குள்ளாய் வளைத்துநீ நிற்பாய்
அதனால் விஷ்ணுவின் மாயை என்று உனை
அறிந்தமெய்ஞ் ஞானியர் பொருந்தவே உரைப்பர். 134

**ஸ்ரீ பரமேசுவரியின் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ ஸ்வரூபம்**

क्षेत्रस्वरूपा क्षेत्रेशी क्षेत्रक्षेत्रज्ञपालिनी ।
क्षयवृद्धिविनिर्मुक्ता क्षेत्रपालसमर्चिता ॥

विजया विमला वन्द्या वन्दारुजनवत्सला ।
वाग्वादिनी वामकेशी वह्निमण्डलवासिनी ॥

भक्तिमत्कल्पलतिका पशुपाशविमोचिनी ।

க்ஷேத்ரஸ்வருபா க்ஷேத்ரேஶீ க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞபாலிநீ
க்ஷயவ்ருத்திவினிர்முக்தா க்ஷேத்ரபால ஸமர்சிதா

விஜயா விமலா வந்த்யா வந்தாருஜன வத்ஸலா
வாக்வாதினீ வாமகேஶீ வன்ஹி மண்டலவாஸினீ

பக்திமத்கல்பலதிகா பஶுபாஶ விமோசினீ.

அம்மை விலாஸினி நின் அடி போற்றி
ஆறு ருகிய தத்துவ வகையால்
ஜீவரின் தேஹம் அமைந்தன ஆகும்
க்ஷேத்திரம் என்றிவ உடலினை உரைப்பர்.

க்ஷேத்திரம் நீயே க்ஷேத்திரம் இதனுள்
சிவையே வசிக்கும் சிவமும் நீயே
க்ஷேத்திரம ஆகிய உடலையும அதனுள்
இருக்கும் போக்தா ஆகும் க்ஷேத்ரகஞன்
என்னும் இருவரை நீயே காப்பாய் .
என்றும் நிறைவும குறைவும் நினைக்கில.

க்ஷேத்ரபாலரின் உத்பத்தி

காளியின் உருவை எடுத்தநின் சினத்தைக்
கண்டே தேவர் கலங்கி நடுங்கிட
தக்ஷணம் சிவனா சிசுவாய் அழுதிட
தயவுடன் வாரித் தேவிநீ எடுத்தே.

நின்முலைப் பாலைக் கொடுத்திட அரனும்
நிமிடத் தில் சினம் இழுத்தவர் குடித்தார்
கோபம் அகன்றஅச் சிசுவினை க்ஷேத்திர
பாலகன் என்றுன் பக்கத்தில் கொண்டனை

க்ஷேத்திரபா லகர் என் றிடும் இவர் உன்னை
சேவித்து ஸ்ரீசக்ர ரதத்தினைக் காப்பர்
சிவையே ஸகல கார்யஸித் திதரும்
விஜயை என்னும் முஹூர்த்தம் நீயே.

பாபம்அற் றவள்நீ புகழினுக் குரியவள்
பக்தரை அன்புடன் தக்ஷணம் காப்பவள்
பக்தரின் நாவில் என்றும் வசிப்பாய்
மிக்கவும் மதுரச் சொற்களைப் பொழிவாய்.

அழகிய குந்தலம் உடையாய் போற்றி
அக்கினி மண்டல மத்தியில் இருப்பாய்
பக்தற்குக் கல்பக விருக்ஷமே ஆவாய்.
பாசத்தை அறுத்தே பசுக்களைக் காப்பாய்.

संहृताशेषपाषण्डा सदाचारप्रवर्तिका ॥

तापत्रयाग्निसंतप्तसमाह्लादनचन्द्रिका ।
तरुणी तापसाराध्या तनुमध्या तमोऽपहा ॥
135 चितिस्तत्पदलक्ष्यार्था चिदेकरसरूपिणी ।
स्वात्मानन्दलवीभूतब्रह्माद्यानन्दसंततिः ॥

ஸம்ஹ்ருதா சேஷபாஷண்டா ஸதாசார ப்ரவர்த்திகா
தாபத்ரயாக்னி ஸந்தப்தஸமாஹ்லாதன சந்த்ரிகா
136 தருணீ தாபஸாராத்யா தனுமத்யா தமோபஹா
சிதிஸ்தத்பதலக்ஷ்யார்த்தா சிதேகரஸ ரூபிணீ
ஸ்வாத்மானந்தலவீபூதப்ரஹ்மாத்யானந்தஸந்ததி:

பாஷண்ட மதங்களை வேருடன் அறுக்கும்
பிர்ம்மவித் தைஅது நீயே ஆவாய்
137 சுத்த ஸதாசா ரங்களை நன்கு
பற்றிட நரரை ப்ரேரணை செய்வாய். 142

தாபத் ரயமெனும் அக்கினி அதனல்
தவிப்போர்க் கமுதைப் பொழியும் நிலவே
தருணீ தவத்தோர் போற்றும் திருவே
138 துடிஇடை யேஅருள் கடலே போற்றி. 143

அவித்தை இருளினை அகற்றும் ரவிநீ
அறிதாம் சிதிஎன உரைக்கும் ஞானநீ
மாப்பெரும் வாக்கிய தத்பத லக்ஷ்யம்
139 ஆகிய ஸத்துசித் ஆனந்த பிர்மம் நீ 144

ஏகசி தானந்த ரஸமே போற்றி
எல்லை இலாதின தானந்தக் கடலின்
திவலை போல் அற்பம் ஆகப் பிர்மாதி
140 தேவரின் ஆனந்தம் ஆமெனச் சொல்வர் 145

**ஸ்ரீ பரமேசுவரியின் நால்வகை வாக்குகளின் ஸ்வரூபம்.**

परा प्रत्यक्चितीरूपा पश्यन्ती परदेवता ।
141 मध्यमा वैखरीरूपा भक्तमानसहंसिका ॥

பரா ப்ரத்யக்சித்ரூபா பச்யந்தீ பரதேவதா
மத்யமா வைகரீரூபா பக்தமானஸஹம்ஸிகா ॥

மூலா தாரத் தில்ப்ரா ணனுடன்
முனைத்தசை வற்றே நிற்கும நிலைஉள
பரைஎனும் வாக்கது நீயே ஆகும்
ப்ரத்யக் சிதிஎனும் அவயக் தம்நீ. 146

நாபிக் கெழுவாய் மனத்துடன் சேர்வாய்
நலம்உள பச்யந் தீவாக் காவாய்
பரதே வதைநீ நெஞ்சில் வருவாய்
புத்தி உடனே மத்யமை ஆவாய். 147

மிக்கவும் தூல வடிவினை உடைய
வைகரீ என்னும் வெளிவாக் காவாய்
நின்உரு ஆம்இந் நால்வகை வாக்கில்
அன்றைய் மூன்றதி கோப்பியம் ஆக 148

ஜீவரின் ஹ்ருதய குஹைதனில் இருக்கும்
ஜீவர் இவற்றைச் சற்றுமே அறியார்
தூலவை கரியாம் வாக்கினைக் கொண்டே
ஜீவர்கள் உலகில் வயவஹரித்திடுவர். 149

பரைபசி யந்தீ மத்யமை இவற்றை
பார்த்தறி வோர் சிவ யோகியர் ஆவர்
பக்தரின் மனமாம் தாமரை ஓடையில்
என்றும் ரமித்திடும் அன்னமே போற்றி. 150

(வேறு)

कामेश्वरप्राणनाडी कृतज्ञा कामपूजिता ।

காமேசுவர ப்ராணநாடீ க்ருதக்ஞா காமபூஜிதா

அரனார் விடத்தை அருந்தியும் பிழைத்தது
அம்மைநின் இருசெவி களிலும் அணியும்
தாடங்கம் அவற்றின் மஹிமையே ஜீவ
நாடியே ஆகி நின்பதிக் கிருப்பாய். 151

ஜீவர் இயற்றும் புண்ணிய பா பத்தை
தெரிந்துள் இருக்கும் ஸாக்ஷிணி நீயே
அன்புடன் அனங்கன் நினைவழி படவே
அகிலம் எலாம் அவன் வசம் உறச் செய்தாய். 152

**காமகிரி முதலான நான்கு பீடங்களில் ஸ்ரீ பரமேசுவரி இருக்கும் நிலை.**

शृङ्गाररससंपूर्णा जया जालन्धरस्थिता ॥
ओड्याणपीठनिलया बिन्दुमण्डलवासिनी ।

ச்ருங்கார ரஸ ஸம்பூர்ணா ஜயா ஜாலந்தர ஸ்திதா||
ஒட்யாண பீட நிலயா பிந்து மண்டல வாஸிநீ |

ச்ருங்கா ரரஸம் நிறைந்தவள் நீயே
ஜயையே மூலா தாரத் திருக்கும்
காம கிரிஎனும் பீடத்தில் இருப்பாய்
கல்யா ணிஉயர் நாபியில் இருக்கும் 153

பூர்ண கிரி எனும் பீடத்தில் இருப்பாய்
பசுக்களின் கண்டத்தில் விசுத்தியின் உள்ளே
ஜாலந் தரம்எனும பீடத்தில் அமர்வாய்
சிவையே ஆக்கினைச் சக்கரம் கடந்தே 154

பிர்மரந் திரத்தில் உட்யாணம் எனும்
பீடத்தில் இருக்கும பிரம ஸ்வரூபிநீ
பிந்துமண் டலம் அதில் வசித்திடும் தேவி 155
ஸுந்தரி சின்மயி ஸந்ததம் போற்றி.

**ரஹஸ்ய யாகத்தால் ஸ்ரீ பரமேசுவரியை ஆராதிக்கும் முறை.**

रहोयागक्रमाराध्या रहस्तर्पणतर्पिता ॥

ரஹோயாகக்ரமாராத்யா ரஹஸ்தர்பண தர்பிதா ||

பசுக்களின் ஹ்ருதய குஹைதனில் இருக்கும்
பரசித் தாகிய அக்கினி தனை
ஸத்குரு அருளால் நன்கறிந் ததனை
ஜொலித்திடச் செய்தைம புலன்கள் அவற்றின் 156

விஷயங் களைஹவி ஸாக்கியே ஸோஹம்
மந்திரம் சொல்லிஇட் டுலயிப் பித்து
ப்ரபஞ்சம் அனைத்தும் பூர்ணா ஹுதியாய்
பாவித்து மனத்தால் ஹோமங்கள் செய்து 157

ஸர்வமும் நான் எனும் பூர்ண ஹந்தையை
ஸாதகன் அடையும் மார்க்கம இதனை
நினைஆ ராதிக் கும் ரஹ ஸியமாம்
யாகம என்றே ஞானியர் உரைப்பர். 158

ப்ரகாசம் விமர்சம் எனும்இரு கரத்தால்
பரையே உன்மனி நிலையாம் ஸ்ருக்கில்
தர்மா தர்ம ஹவிஸினை வைத்தே
தமஸெனும் இருளை அறவே அகற்றும். 159

இந்தனம் இன்றியே அந்தர் முகந்தனில்
எறியும ஸம்வித் தக்கினி ஆகிய
நின் இடை இட்டுக் கர்மங்கள் அற்று
நாதன் சிவம்முதல் அவனீ வரை உள 160

தத்துவம் அனைத்தையும் பூர்ண ஹுதியாய்
ஸாதகன் இட்டே தக்தம தாககி
சாந்தியை அடையும் தாப்பணம் இதனல்
சிவையே திருபதி அடைந்திடு வாயே. 161

வேதம் முதலிய மந்திரம் அனைத்தும்
வேசியர் போல்அவை வெளிபபடை ஆகும்
குலமகள போலவெகு ரஹஸிய மாய்ஸ்ரீ
வித்தைய தொன்றே கோப்பியம் ஆகும். 162

सद्यःप्रसादिनी विश्वसाक्षिणी साक्षिवर्जिता ।
षडङ्गदेवतायुक्ता षाड्गुण्यपरिपूरिता ॥
नित्यक्लिन्ना निरुपमा निर्वाणसुखदायिनी ।
नित्याषोडशिकारूपा श्रीकण्ठार्धशरीरिणी ॥
प्रभावती प्रभारूपा प्रसिद्धा परमेश्वरी ।

ஸத்ய:ப்ரஸாதினீ விச்வ ஸாக்ஷிணீ ஸாக்ஷி வர்ஜிதா ।
ஷடங்க தேவதா யுக்தா ஷாட்குண்ய பரிபூரிதா ॥
நித்ய க்லிந்நா நிருபமா நிர்வாண ஸுக தாயிநீ ।
நித்யா ஷோடஶிகா ரூபா ஶ்ரீகண்டார்த ஶரீரிணீ ॥
ப்ரபாவதீ ப்ரபா ரூபா ப்ரஸித்தா பரமேச்வரீ ।

உறுதி யுடன்நின் திருவடி பிடிக்கில்
உடனே விரும்பும் அனைத்தையும் அளிப்பாய்
உலகினுக் கெல்லாம ஸாக்ஷிணி நீயே
உமையே நினக்கோர ஸாக்ஷியும இலையே. 163

## ஷடங்க தேவிகள்

ஈசுவரி ஹ்ருதய தேவீ சிரசின்
தேவீ சிகையின் தேவீ கவச
தேவீ நேத்திர தேவீ அஸ்திர
தேவீ எனும்இவ் வறுவரும் ஈசனின் 164

ஸாவக் ஞத்வம் நித்திய திருப்தி
திவ்விய அனாதி போதம் ஸர்வ
ஸ்வதந்திரம் குறையாச் சக்தி அனந்த
சக்திகள் எனும் அறு சக்திகள் ஆவா. 165

ப்ரபுவாம் ஈசனுக் கியல்பாய் இருக்கும்
பரையே அங்க தேவிகள் என்னும்
சக்தி களாம்இவ் அறுவரும் உன்னைச்
சுற்றிலும் அழகாய் சேவித் தமர்வா. 166

திவ்யை சுவர்யம் தர்மம் கீர்த்தியும்
ஸ்ரீயுடன் ஞானம் வைராக் கியமும்
மேலாய் இவவறு குணங்களை உடையாய்
மாதா நிததிய க்லின்னையே போற்றி. 167

## நித்யா ஷோடசிகைகள்

ஒப்பற் றவள்நீ நிர்வா ணசுகம்
உதித்திடச் செய்யும் சிவத்தின் சக்திநீ
ஷோடச திதிகளின் ரூபிகள் ஆன
இவையே காமே சுவரிமுத லான 168

நித்யா ஷோடச சக்திகள் நீயே
நீயே ஷோடசீ மந்திரம் ஆகும்
பரனின தேஹத்தில் பாதியைக் கிரஹித்தாய்
ப்ரஸித்தம் உள அணி மாதிகள் ஆன 169

*சிறிய ஸித்திகள் எண்மரு மேநின்*
*தேஹத்தின் கிரணங்கள ஆகவே இருப்பர்*
*பாஸ்கரா கோடியின் ஒளியுடன் இருப்பாய்*
*புகழ்உள ஸ்ரீபர மேசுவரி போற்றி.* 170

मूलप्रकृतिरव्यक्ता व्यक्ताव्यक्तस्वरूपिणी ॥

*மூலப்ரக்ருதிரவ்யக்தா வ்யக்தாவ்யக்த ஸ்வரூபிணி ॥*

*உலகினுக் கெல்லாம் காரணம் எனவே*
*உரைத்திடும் மூல ப்ரகிருதியும் நீயே*
*முக்குணங் களுமஸமம் ஆகிய அவ்யக்த*
*நிலைநீ வயக்தா வயக்தமும் நீயே.* 171

**நான்காவது தரங்கம ஸம்பூர்ணம்.**

## ஐந்தாவது தரங்கம்

व्यापिनी विविधाकारा विद्याविद्यास्वरूपिणी ।
महाकामेशनयनकुमुदाह्लादकौमुदी ॥
भक्तहार्दतमोभेदभानुमद्भानुसन्ततिः ।

*வ்யாபிநீ விவிதாகாரா வித்யாவித்யா ஸ்வரூபிணீ ।*
*மஹாகாமேஶ நயந குமுதாஹ்லாத கௌமுதீ ॥*
*பக்தஹார்த தமோபேத பாநுமத் பாநு ஸந்ததி: ।*

*மூவகை அஹங்கா ரங்களின் காரியம்*
*ஆகிய உலகை வ்யாபித்து நிற்பாய்.* 172

*ப்ராகிருத வைகிருத கௌமா ரம்எனப்*
*புகலும் ஸிருஷ்டியின் பேதம் நீயே*
*பெருமை மிகும்ஸ்ரீ பிர்ம்மவித் தையும்நீ*
*பசுக்களை பணிக்கும் அவித்தையும் நீயே.* 173

*வித்தை அவித்தை என இரு வகையாய்*
*விளங்கும் நின்உரு இரண்டையும அறிந்தோர்*
*அவித்தை அதனுல் மிருத்யுவைக் கடப்பர்*
*அன்னுய் வித்தையால் அமிருதம் புசிப்பர்.* 174

மாப்பெருங் காமே சுவரர்விழிக் குமுத
மலரினை மகிழ்வால் விரித்திடும் நிலவே
நின்னடி போற்றிடும் அன்பரின் ஹ்ருதய
இருளினை அகற்றும் பரிதியின் ஒளியே. 175

शिवदूती शिवाराध्या शिवमूर्तिः शिवंकरी ॥

शिवप्रिया शिवपरा शिष्टेष्टा शिष्टपूजिता ।
अप्रमेया स्वप्रकाशा मनोवाचामगोचरा ॥

चिच्छक्तिश्चेतनारूपा जडशक्तिर्जडात्मिका ।
गायत्री व्याहृतिः सन्ध्या द्विजवृन्दनिषेविता ॥

तत्त्वासना तत्त्वमयी पञ्चकोशान्तरस्थिता ।
निःसीममहिमा नित्ययौवना मदशालिनी ॥

ஶிவதூதீ ஶிவாராத்யா ஶிவமூர்த்தி: ஶிவங்கரீ ॥
ஶிவப்ரியா ஶிவபரா ஶிஷ்டேஷ்டா ஶிஷ்டபூஜிதா ।
அப்ரமேயா ஸ்வப்ரகாஶா மநோவாசாமகோசரா ॥

சிச்சக்திச்சேதநாரூபா ஜடஶக்திர் ஜடாத்மிகா ।
காயத்ரீ வ்யாஹ்ருதி: ஸந்த்யா த்விஜப்ருந்தநிஷேவிதா ॥

தத்வாஸனா தத்வமயீ பஞ்சகோஶாந்தரஸ்திதா ।
நிஸ்ஸீமமஹிமா நித்யயௌவநா மதஶாலிநீ ॥

அரனைத் தூதாய்ச் சும்ப னிடம்நீ
அனுப்பிய தால்சிவ தூதி யானாய்
அனபுடன் நினைஆ ராதித்தே சிவன்
தன்னுடற் பாதியில் பெண்உரு ஆனார். 176

மங்களம் ஆம்சிவ மூர்த்தியின் உருநீ
மலம்ஒழித் தன்பரைச் சிவமே ஆக்குவை
திங்கள் அணிந்திடும் சிவனார் பாரயை
சிவமாம் பதிக்கும் மகிமை அளிப்பவள். 177

சிஷ்டர் இடம்மிகத் தயை உள திருவே
சிஷ்டர்பூ சிக்கும் உத்தமத் தெய்வமே
சிவையே ஸமுத்திர ஜலத்தினுள் இருப்பாய்
ஸ்வயம்பிர காச ஜோதிநீ ஆவாய். 178

மனம்வாக் கிரண்டிற் கெட்டாப் பொருள்நீ
மாயையை முற்றும் அழிக்கும் சித்துநீ
ஜீவரின் உள்ளத் திருந்தவர் வினைபோல்
சேஷ்டிக்க மதியை ஆட்டும் சேதனம். 179

ஜடமாம் உலகினை சேஷ்டிக்கச் செய்யும்
ஜடசக் தியும்நீ ஜடப்பொருள் களும்நீ
மறைகளின் மாதா காயத் ரியும்நீ
மகிமை மிகஉள வ்யாஹ்ருதி நீயே. 180

பரிதியின் மண்டல மத்தியில் இருக்கும்
பூரண பிரம்மசை தன்யம் அதுவே
இருந்திடும் என்னுடை ஹ்ருதயத் திலும்இவ்
இரண்டும் ஒன்றென உணரும் ஸந்த்யைநீ. 181

வேதங்கள் ஓதிடும் அந்தணர் ப்ருந்தம்
விருப்புடன் துதிக்கும் வைபவம் உடையாய்
அரன்முதல் தரணீ வரைஉள தத்வம்
அனைத்தையும் கடந்தே அப்பால் இருப்பாய். 182

ஜீவரின் புத்தியைச் சுழன்றிடச் செய்வாய்
சிவையே யான்இது எனஇரு வகையாய்
பேதமே இல்லா ஏக அறிவுநீ
பிரியமாய அழைக்கும் அபிமொழி நீயே. 183

அன்ன மயாதி கோசங் களுக்குள்
ஆத்தும வடிவாய நீயிருந் திடுவாய்
அளவிட முடியாப் பெரும் புகழ் உடையாய்
அழியா நித்திய யௌவனம் உடையாய். 184

அன்னிய விஷயப் பற்றுதல் இன்றி
ஆனந்தம் ஒன்றையே நீஅனு பவிப்பாய் 185

मदघूर्णितरक्ताक्षी मदपाटलगण्डभूः ।
चन्दनद्रवदिग्धाङ्गी चाम्पेयकुसुमप्रिया ॥

कुशला कोमलाकारा कुरुकुल्ला कुलेश्वरी ।
कुलकुण्डालया कौलमार्गतत्परसेविता ॥

कुमारगणनाथाम्बा तुष्टिः पुष्टिर्मतिर्धृतिः ।

மதகூர்ணிதரக்தாக்ஷீ மதபாடலகண்டபூ: ।
சந்தநத்ரவதிக்தாங்கீ சாம்பேயகுஸுமப்ரியா ॥

குஶலா கோமளாகாரா குருகுல்லா குலேச்வரீ ।
குலகுண்டாலயா கௌளமார்கதத்பரஸேவிதா ॥

குமாரகணநாதாம்பா துஷ்டி: புஷ்டிர் மதிர் த்ருதி: ।

*ஈசுவரி மதுவைப் பருகிய களியால்*
*எழில்மிகும் நின்விழி சிவந்தே சுழலும்*
*மதுமதத் தால்இரு கன்னமும் சிவந்தே*
*மாணிக்க ரத்தினச் சிலயென ஒளிரும்.* 186

*சந்தனம் கமழ்ந்திடும் அங்கங்கள் உடையாய்*
*சண்பக மலர்கள்மீ தன்புடை அழகி*
*ஸிருஷ்டிகள் முதலாம் முத்தொழில வல்லாய்*
*ஸுந்திரக் கோமள வடிவினை உடையாய்.* 187

*அன்னை எனும்குரு குல்லையும் நீயே*
*அவரவர் குலத்தின் தெய்வமும் நீயே*
*ஜீவரின் மூலகுண் டத்தில் உறங்கும்*
*ஸர்ப்பம் போலுள மூலகுண் டலியே.* 188

*கௌல மதத்தினர் பூஜிக்கும் தேவி*
*கந்தன் கணேசரை ஈன றிட்ட ஜனனீ.* 189

*துஷ்டி எனும்மன த்ருப்தியே போற்றி*
*புஷ்டி என றுரைக்கும் செழுமையே போற்றி*
*பகுத்தறி வாகிய மதியது நீயே*
*பரையே மேலாம் உறுதியும் நீயே.* 190

शान्तिः स्वस्तिमती कान्तिर्नन्दिनी विघ्ननाशिनी ॥

तेजोवती त्रिनयना लोलाक्षीकामरूपिणी ।
मालिनी हंसिनी माता मलयाचलवासिनी ॥

सुमुखी नलिनी सुभ्रूः शोभना सुरनायिका ।
कालकण्ठी कान्तिमती क्षोभिणी सूक्ष्मरूपिणी ॥

वज्रेश्वरी वामदेवी वयोऽवस्थाविवर्जिता ।
सिद्धेश्वरी सिद्धविद्या सिद्धमाता यशस्विनी ॥

ஶாந்தி: ஸ்வஸ்திமதீ காந்திர் நந்தினீ விக்நநாஶினீ ||

தேஜோவதீ த்ரிநயநா லோலாக்ஷீகாமரூபிணீ ।
மாலினீ ஹம்ஸினீ மாதா மலயாசலவாஸினீ ||

ஸுமுகீ நளினீ ஸுப்ரூ: ஶோபநா ஸுரநாயிகா ।
காலகண்டீ காந்திமதீ க்ஷோபிணீ ஸூக்ஷ்மரூபிணீ ||

வஜ்ரேச்வரீ வாமதேவீ வயோவஸ்தாவிவர்ஜிதா ।
ஸித்தேச்வரீ ஸித்தவித்யா ஸித்தமாதா யஶஸ்வினீ ||

சாந்தி எனும்மன அமைதியே போற்றி
ஸ்வஸ்தி எனும் நித்ய ஸத்தையே போற்றி
இந்து அக்கினிரவி விண்மீன் மின்னல்
இவைகளுக் கெட்டா ஒளியே போற்றி. 191

நந்தன் திருமகள் நந்தினி போற்றி
நிமிடத்தில் இடர்களை அழிப்பாய் போற்றி
ஆதித் தன்முத லாம்ஜோ திகளின்
ஆதாரம் ஆகிய ஜோதியே போற்றி. 192

சந்திரன் ஸூரியன் அக்கினி இவர்கள்
ஸுந்தர மாம்நின் விழிமூன் றுவர்
பெண்களின் காம வடிவாய் இருப்பாய்
பரையே மாலினி எழுத்துக்கள் ஆவாய். 193

அஜபை என்றிடும் ஹம்ஸமந் திரம்அது
அகில உயிர்களின் சுவாசமே ஆகும்
சிவையே அஜபை மந்திரம் நீயே
ஸர்வமந் திரங்களின் மாதிருகை நீயே. 194

மலய கிரிதனில் வஸித்திடும தேவி
மதிமண் டலம்என அழகிய ஸுமுகி
செந்தா மரைநிகர் அங்கமும் உடையாய்
ஸுந்தர மாம்இரு புருவம் உடையாய். 195

சோபன மாம்திரு மேனியே போற்றி
ஸுரர்களுக் கெல்லாம் ஈசுவரி போற்றி
கண்டம் கறுத்த காளியே போற்றி
காந்தி மிகஉள கௌரியே போற்றி. 196

*ஜகங்களைப் படைத்திட ஈசன் மனத்தைச்*
*சலித்திடச் செய்யும் மூல ப்ரகிருதிநீ*
*அகில அக்ஷரங் களைலயித் திடச்செய்*
*அற்புத ஸூக்ஷ்ம ஹோமமும் நீயே.* 197

*இந்திர னுக்குவஜ் ராயுதம் அளித்த*
*ஈசுவரி நீவஜ் ரேசுவரி போற்றி*
*ஈசன் இடப்புறம் அதனில் அமர்வாய்*
*என்றும் புதுமை இலாதவள் ஆவாய்.* 198

*ஸித்தர்பூ ஜிக்கும் அம்பிகை ஸித்த*
*வித்தை எனும்ஸ்ரீ வித்தையே போற்றி*
*ஸித்தரின் மாதா நீயே ஆவாய்*
*சிவையே பெரும்புகழ் உடையாய் போற்றி.* 199

**ஷடாதாரங்களில் ஸ்ரீ பரமேச்வரி இருக்கும் நிலை.**

**விசுத்தி சக்கரம்.**

विशुद्धिचक्रनिलयारक्तवर्णा त्रिलोचना ।
खट्वाङ्गादिप्रहरणा वदनैकसमन्विता ॥

पायसान्नप्रिया त्वक्स्था पशुलोकभयंकरी ।
अमृतादिमहाशक्तिसंवृता डाकिनीश्वरी ॥

*விஶுத்தி சக்ர நிலயா ரக்தவர்ணா த்ரிலோசநா ।*
*கட்வாங்காதி ப்ரஹரணா வதநைக ஸமந்விதா ॥*

*பாயஸாந்ந ப்ரியா த்வக்ஸ்தா பஶுலோக பயங்கரீ ।*
*அம்ருதாதி மஹாஶக்தி ஸம்வ்ருதா டாகிநீச்வரீ ॥*

*ஜீவர்கள் கண்டத் திருக்கும் விசுத்தி*
*சக்கரம் ஷோடச தளத்துடன் இருக்கும்*
*பரையே ஷோடச உயிர்எழுத் துக்கள்*
*பிந்து வதனுடன் தளம் ஒளிர்கும்* 200

*தாம்ர நிறம்உள பங்கஜம் இதுவான்*
*தத்துவம் ஆமெனத் தெரிந்தோர் உரைப்பர்*
*பத்துமம் அதனின் மத்தியில் அற்பம்*
*சென்னிறத் துடன்முக் கண்கள் உடன்நீ* 201

திவ்யகட் வாங்கம் சூலம் கட்கம்
சர்மம் எனும் இவை கைகளில் கொண்டே
ஏக முகத்துடன் இருந்திடும் நின்னை
ஈசுவரி டாகினி யோகினி என்பர் 20

பாயஸ அன்னம் விருப்புடன் புசிப்பாய்
பரையே தோல் எனும் தாதுவில் இருப்பாய்
பேத புத்தியுள ஜீவருக் கெல்லாம்
பந்தம் கொடுக்கும் பயங்கரி ஆவாய் 20

டாகினி யாம்நின்னைச் சுற்றிலும் பத்ம
தளங்களில் ஷோடச சக்திகள் இருப்பர்
அமிருதைஆ காஷணி இந்திராணி நீ
ஈசானி, உமை ஊர்த்துவ கேசினி. 20

ருத்ரை யுடன்ரு காரை லுகாரை,
லூகா ரையுடன் ஏக பதையாள்
ஐசுவர் யாத்மிகை ஓங்கா ரையுடன்
ஔஷதி அம்பிகை அக்ஷரை ஆவர். 205

### அனுஹத சக்ரம்

अनाहताब्जनिलया श्यामाभा वदनद्वया ।
दंष्ट्रोज्ज्वलाक्षमालादिधरा रुधिरसंस्थिता ॥

कालरात्र्यादिशक्त्यौघवृता स्निग्धौदनप्रिया ।
महावीरेन्द्रवरदा राकिण्यम्बास्वरूपिणी ॥

அநாஹதாப்ஜ நிலயா ச்யாமாபா வதநத்வயா ।
தம்ஷ்ட்ரோஜ்வலாக்ஷமாலாதி தரா ருதிர ஸம்ஸ்திதா ॥

காளராத்ர்யாதி ஶக்த்யௌக வ்ருதா ஸ்நிக்தௌதந ப்ரியா ।
மஹாவீரேந்த்ர வரதா ராகிண்யம்பா ஸ்வரூபிணீ ॥

இருதயத் திருக்கும் அனுஹத சக்ரம்
இலங்கிடும் பன்னிரு தளம்உள தாக
சியாமள நிறமாய் இருமுகங் களுடன்
சூலம் டமருக பாலங் களுடன் 206

அக்ஷ மாலை இவை கரங்களில் கொண்டே
அன்னாய் கோரைப் பற்கள் விளங்கிட
உதிரம் எனச்சொலும் தாதுவில் இருப்பாய்
உமையே வாயுவின் சக்கிரம் இதனில். 207

காள ராத்ரீ கண்டிதை காயத்ரீ
கண்டா கர்ஷணி நார்ணா சண்டிகை
சாயை ஜயை சங் காரிணி ஞான
ரூபை டங்கஹஸ் தைடங் காரிணி. 208

என்னும் பன்னிரு அக்ஷர சக்திகள்
இதழ்களில் இருப்பர் ஈசுவரி இவரின்
மத்தியில் இருப்பாய் நெய் அன் னத்தை
மெத்த விருப்புடன் நீபுசித் திடுவாய் 209

அஹமெனும் பூர்ண ஹந்தை உணர்வில்
இதமெனும் ஜகத்தின் தோற்றமே இல்லா
மாப்பெரும் தீரர் போற்றிடும் நின்னை
மகிமை மிகஉள ராகிணி என்பர். 210

### மணிபூரக சக்ரம்

मांणपूराब्जानलया वदनत्रयसयुता ।
वज्रादिकायुधोपेता डामर्यादिभिरावृता ॥

रक्तवर्णा मांसनिष्ठा गुडान्नप्रीतमानसा ।
समस्तभक्तसुखदा लाकिन्यम्बास्वरूपिणी ॥

மணிபூராப்ஜ நிலயா வதநத்ரய ஸம்யுதா ।
வஜ்ராதிகாயுதோபேதா டாமர்யாதிபிராவ்ருதா ॥

ரக்த வர்ணா மாம்ஸ நிஷ்டா குடான்ன ப்ரீத மாநஸா ।
ஸமஸ்த பக்த ஸுகதா லாகிந்யம்பா ஸ்வரூபிணீ ॥

உந்தி தனில்மணி பூரக சக்ரம்
உமையே பத்து தளம்உள தாகும்
அப்புவின் தத்துவம் ஆமிது என்பர்
பத்துமம் அதனின் மத்தியில் நான்கு 211

புயங்களில் வஜ்ரம் சக்தி தண்டம்
அபயம் எனும் இவை அழகுடன் ஏந்தி
இருப்பாய் முகங்கள் மூன்றுடன் சிவப்பாய்
ஈசுவரி பத்ம தளங்களில் முறையே 212

டாமரி டங்கா ரிணியுடன், ஞார்ஞள்
தாமஸி ஸ்தாண்வீ தாக்ஷா யணியாள்
த்ராத்ரீ நாரீ பார்வதி யும்பட்
காரிணி என்னும் பதின்மரும் இருப்பர். 213

மாமிசம் என்னும் தாதுவில் இருப்பாய்
மதுர குளான்னம் தனை புசிப்பாய்
பக்தருக் கழியாச் சுகத்தினைக் கொடுப்பாய்
ரக்தவர் ணம்உள லாகினி போற்றி. 214

ஐந்தாவது தரங்கம் ஸம்பூர்ணம்.

## ஆறுவது தரங்கம்

### ஸ்வாதிஷ்டானம்

स्वाधिष्ठानाम्बुजगता चतुर्वक्त्रमनोहरा ।
शूलाद्यायुधसंपन्ना पीतवर्णातिगर्विता ॥

मेदोनिष्ठा मधुप्रीता वन्दिन्यादिसमन्विता ।
दध्यन्नासक्तहृदया काकिनीरूपधारिणी ॥

ஸ்வாதிஷ்டாநாம்புஜகதா சதுர்வக்த்ரமநோஹரா ।
ஶூலாத்யாயுத ஸம்பந்நா பீதவர்ணாதிகர்விதா ॥

மேதோநிஷ்டா மதுப்ரீதா பந்திந்யாதி ஸமந்விதா ।
தத்யந்நாஸக்த ஹ்ருதயா காகினீ ரூபதாரிணீ ॥

ஸ்வாதிஷ் டானபங் கயம் ஆறுள்ள
தளங்க ளுடன்குஹ் யத்தலம் தங்கும்
சிவையே அக்கினி தத்துவமாம் இந்த
செந்நிற பங்கய மத்தியில் நீயும் 215

முகங்கள் நான்குடன் சூல கபாலம்
அங்குச பாசங் களைக்கரம் வகித்தே
பொன்னிறம் ஆகிய மேனி யுடன்மிக
கர்வத் துடன்பர மேசுவரி இருப்பாய் 216

கொழுப்பெனும் தாதுவில் இருப்பாய் கொம்புத்
தேனைப் பருகிட விருப்புடன் இருப்பாய்
பந்தினி பத்ர காளி மாயா
யசஸ்வினி ரக்தை லம்போஷ் டீஎனும் 217

சக்திகள் அறுவர் தளங்களில் இருப்பர்
சுத்ததத் யோதனம் விரும்பிநீ புசிப்பாய்
ஸ்வாதிஷ் டானசக்கிரத்தில் உறையும்
காகினி யாகிய யோகினி போற்றி 218

மூலாதாரம்

मूलाधाराम्बुजारूढा पञ्चवक्त्रास्थिसंस्थिता ।
अङ्कुशादिप्रहरणा वरदादिनिषेविता ॥

मुद्गौदनासक्तचित्ता साकिन्यम्बास्वरूपिणी ।

மூலாதாராம்புஜாரூடா பஞ்சவக்த்ராஸ்திஸம்ஸ்திதா ।
அங்குசாதி ப்ரஹரணா வரதாதி நிஷேவிதா ॥

முத்கௌதநாஸக்தசித்தா ஸாகின்யம்பாஸ்வரூபிணீ ।

மூலா தார நான்கிதழ்ப் பத்மம்
மேதினி தத்துவம் ஆம்என மொழிவர்
பத்தும மத்தியில் பஞ்ச முகத்துடன்
அஸ்தி எனச்சொலும் தாதுவில் இருப்பாய் 219

அங்குசம் பங்கஜம் புஸ்தகம் ஞான
முத்திரை இவற்றை ஹஸ்தம் தரித்தே
இருப்பாய் வரதை ஸ்ரீயுடன் ஷண்டை
ஸரஸ்வதி என்போர் தளங்களில் இருப்பர் 220

மெத்த விருப்புடன் பொங்கலைப் புசிப்பாய்
சக்திநீ மூலா தாரத் திருப்பாய்
ஸௌந்தரம் ஆகிய கண்மூன் றுடைய
ஸாகினி யாம்பெரும் யோகினீ போற்றி 221

ஆக்ஞை சக்ரம்

आज्ञाचक्राब्जनिलया शुक्लवर्णा षडानना ॥
मज्जासंस्था हंसवतीमुख्यशक्तिसमन्विता ।
हरिद्रान्नैकरसिका हाकिनीरूपधारिणी ॥

ஆக்ஞாசக்ராப்ஜநிலயா ஶுக்லவர்ணா ஷடாநநா ॥
மஜ்ஜாஸம்ஸ்தா ஹம்ஸவதீமுக்யஶக்திஸமந்விதா ।
ஹரித்ராந்நைகரஸிகா ஹாகிநீரூபதாரிணீ ॥

இருபுருவங்களுக் கிடைஉள ஆக்கினை
சக்கரம் இருதள பத்மம் ஆகும்
வெண்ணிறம் ஆய்நீ அறுமுகங் களுடன்
விளங்குவை மஜ்ஜை தாதுவில் இருந்தே 222

ஹம்ஸவதீ,க்ஷமாவதி இவர்இரு
தளங்களில் அமர்ந்துன் இருபுறம் இருப்பர்.
ஹரித்ரான் னம்தனை ருசித்தே அருந்திடும்
ஹாகினி யாம்பெரும் யோகினி போற்றி 223

ஸஹஸ்ரார சக்ரம்

सहस्रदलपद्मस्था सर्ववर्णोपशोभिता ।
सर्वायुधधरा शुक्लसंस्थिता सर्वतोमुखी ॥
सर्वौदनप्रीतचित्ता याकिन्यम्बास्वरूपिणी ।

ஸஹஸ்ரதளபத்மஸ்தா ஸர்வவர்ணோபஶோபிதா ।
ஸர்வாயுததரா ஶுக்லஸம்ஸ்திதா ஸர்வதோமுகீ ॥
ஸர்வௌதநப்ரீதசித்தா யாகிந்யம்பாஸ்வரூபிணீ ।

சிரஸில் ஸஹஸ்ர தளகமலத்தில்
ஸர்வ நிறத்துடன் சிவையே யிருப்பாய்
ஆயிரம் இதழ்களில் இருபது முறையாய்
ஐம்பது அக்ஷர சக்திகள் இருப்பர் 224

ஸர்வா யுதங்களைத் தரித்தே ஸர்வ
திக்கிலும் முகங்கள் விளங்கிடச் சுக்ல
தாதுவில் இருப்பாய் எவ்வகை அன்னமும்
தேவிநீ புசிப்பாய் யாகினி யாவாய் 225

(வேறு பலவகை)

स्वाहा स्वधामतिर्मेधा श्रुतिः स्मृतिरनुत्तमा ॥

पुण्यकीर्तिः पुण्यलभ्या पुण्यश्रवणकीर्तना ।
पुलोमजार्चिता बन्धमोचनी बर्बरालका ॥

विमर्शरूपिणी विद्या वियदादिजगत्प्रसूः ।
सर्वव्याधिप्रशमनी सर्वमृत्युनिवारिणी ॥

अग्रगण्याचिन्त्यरूपा कलिकल्मषनाशिनी ।
कात्यायनी कालहन्त्री कमलाक्षनिषेविता ॥

ताम्बूलपूरितमुखी दाडिमीकुसुमप्रभा ।
मृगाक्षी मोहिनी मुख्या मृडानी मित्ररूपिणी ॥

नित्यतृप्ता भक्तनिधिर्नियन्त्री निखिलेश्वरी ।
मैत्र्यादिवासनालभ्या महाप्रलयसाक्षिणी ॥

ஸ்வாஹா ஸ்வதாமதிர் மேதா ச்ருதி: ஸ்ம்ருதிரநுத்தமா ॥

புண்யகீர்த்தி: புண்யலப்யா புண்யச்ரவண கீர்த்தநா ।
புலோமஜார்சிதா பந்தமோசநீ பர்பராளகா ॥

விமர்ஶரூபிணீ வித்யா வியதாதி ஜகத்ப்ரஸூ: ।
ஸர்வவ்யாதி ப்ரஶமநீ ஸர்வம்ருத்யுநிவாரிணீ ॥

அக்ரகண்யாசிந்த்யரூபா கலிகல்மஷநாஶிநீ ।
காத்யாயநீ காலஹந்த்ரீ கமலாக்ஷநிஷேவிதா ॥

தாம்பூலபூரிதமுகீ தாடிமீகுஸுமப்ரபா ।
ம்ருகாக்ஷீ மோஹிநீ முக்யா ம்ருடாநீ மித்ரரூபிணீ ॥

நித்யத்ருப்தா பக்தநிதிர் நியந்த்ரீ நிகிலேச்வரீ ।
மைத்ர்யாதிவாஸநாலப்யா மஹாப்ரளயஸாக்ஷிணீ ॥

அமரரின் பொருட்டாய் அக்கினி யில்இடும்
ஆஹுதி மந்திரம் ஸ்வாஹையும் நீயே
அன்றுய் பிதிர்க்களின் பொருட்டாய்ப் பிண்டம்
அளிக்கும் ஸ்வதைஎனும் மந்திரம் நீயே 226

முற்றும் மனம் அது அற்ற நிலைநீ
மேதையென் றுரைக்கும் தாரணை சக்திநீ
மகிமை மிகஉள சுருதி களும்நீ
மேலாம் பலவகை ஸ்மிருதிகளும் நீயே 227

நின்னிலும் உத்தமர் இலைஇலை உண்மை
புண்ணிய திவ்யப் புகழினை உடையாய்
புண்ணிய ரேகினைப் பொருந்திட முடியும்
புண்ணிய சிரவண கீர்த்தனம் உடையாய் 228

இந்திரன் பத்தினி வழிபடும் தேவி
பந்தம் அறுத்தே பசுக்களைக் காப்பாய்
ஸிந்துவின் அலைபோல் குந்தலம் உடையாய்
ஜகத்தை உணாத்திடும் விமர்சம் நீயே. 22

ஞானம் எனும்பிர்ம வித்தையே போற்றி
வான்முதல் ஆம்ஜகம் ஈன்றனை போற்றி
கணத்தில் நோய்கள் அனைத்தையும் அழிப்பாய்
கொடிதாம் ம்ருத்யுவை வேருடன் அறுப்பாய். 23

எண்ணம் எழும்புமுன் முதலில நினையே
எண்ணிய பின்பே மனம்வே றெண்ணும்
சிந்தனைக் கெட்டாப் பொருள்நீ கலியின்
கல்மஷம் அகற்றும் காத்யா யனிநீ. 23

காலம் தனையும் விழுங்கும் சித்துநீ
கைகுவித் தச்சுதன் பணியும் சக்திநீ
வாசனைத் தம்பலம் அடக்குவை மாதுளை
மலரெனச் சென்னிறம் ஆகநீ இருப்பாய். 23

அழகிய மான்விழி உடையாய் போற்றி
அஸுரரை மயக்கும் மோஹினி போற்றி
பரனின் முக்கிய சக்தியே போற்றி
மிருடனின் பத்தினி ம்ருடானியே போற்றி. 23

பன்னிரு பரிதிகள் உருவே போற்றி
பரனின் நித்திய திருப்தியே போற்றி
பக்தருக் கனைத்தும் அளித்திடும் திருவே
பிரபஞ்சம் நடத்தும் நியந்திரி போற்றி. 23

உலகினுக் கெல்லாம் ஈசுவரி போற்றி
உயிர்கள் இடத்தில் அன்பும் கருணையும்
முதிதை துஷ்டர் இடத்தில் உபேக்ஷை
என்னும் இவற்றால் நின்னை அடைவர். 235

பிர்மா திகளும் பிரளயத்தில் அழிவர்
பரையே நின்பதி ஒருவரே அழியார்
அழியாப் பொருள்சிவ னார்மகிழ் பத்தினி
அதனால் நீயே நித்யஸு மங்கலி. 236

पराशक्तिः परानिष्ठा प्रज्ञानघनरूपिणी ।
माध्वीपानालसा मत्ता मातृकावर्णरूपिणी ॥

பராஶக்தி: பராநிஷ்டா ப்ரக்ஞாநகனரூபிணீ ।
மாத்வீபாநாலஸா மத்தா மாத்ருகாவர்ணரூபிணீ ॥

தேஹத்தில் இருக்கும் தாதுக்கள் ஒன்பதில்
தோலுடன் ரத்தம் மாமிசமும் கொழுப்பும்
அஸ்திகள் என்னும் தாதுக்கள் ஐந்தும்
சக்தியின தாதுக்கள் ஆம் இவை எனபர். 237

பிராணன் மஜ்ஜை சுக்லம் ஜீவன்
பகர்ந்த நான்கும் பரனின் அம்சம்
இவற்றினைக் கடந்தே இருந்திடும் பத்தாம்
தாது எனும்பரா சக்திநீ ஆகும். 238

சாஸ்திரத் தால்குரு வாக்கியத் தாலும்
ஜகங்கள் அனைத்தும் தான்என உணர்ந்தே
செய்கரு மங்கள் அனைத்தும் ஒழிந்து
சிவமா யோகியர் நிற்கும் நிலை நீ. 239

உள்ளும் புறமும் உப்பது ஏக
ரஸமே யாம்அது போல்உமை நீயே
ஒன்றாய் உள்வெளி எங்கும் நிறைந்தே
நின்றாய் பிரக்ஞை கனவடி வாக. 240

மாத்வீ எனும்மது பானத்தி னால்உன்
மனமந் தர்முக நிஷ்டையில் இருக்கும்

பரனின் பூர்ண ஹந்தை நீ எனப்
பகரும் மாமறை சிரங்கள் அனைத்தும். 241

## ஸ்ரீ தேவியின் மாத்ருகை என்னும் அக்ஷரவடிவு.

உயிரெழுத் துப்பதி னாறும் அவைகள்
உமையே புகையின் நிறமுள தாகும்
ககரம் முதலாம் பன்னிரண் டெழுத்தும்
கண்ணிற் கழகாய்ச் செந்நிறம் ஆகும் 242

ட(ड)கரம் முதல்பத் தெழுத்தும் வெண்மை
தேவி ப(ब)காரம் முதலைந் தெழுத்தும்
அருண நிறம்லக ரம்முதல் ஐந்து
அக்ஷரம் பொன்னிறம் ஆகவே இருக்கும் 243

மின்னல் எனஹக்ஷ இரண்டும் மிளிரும்
மாதிருகை எனும் இவ்வட் சரமெல்லாம்
நின்னுரு வாம்இவை சிவ சக்தி வாசகம்
என்னும் இருவகை மாத்ருகை என்பர் 244

அகரம் என்பதே முதலெழுத் தாகும்
அந்திய எழுத்தே க்ஷகரம்என் றாகும்
இவ்விரு அக்ஷரம் சேரில் இவற்றுள்
எல்லா எழுத்தும் அடங்குவ தாகும் 245

சப்த பிரம்ஹம் எனும்அக்ஷ மாலை
இதுநீ சப்தம் கடந்தே நிற்பவள்
சப்தா தீதை என்றறிருந் துன்னை
ஜபித்திடில் பிர்மக் ஞானியர் ஆவர். 246

அனுத்தர ஆனந்தம் ஆகிய சிதியில்
ஈசுவரி இச்சைசேர்ந் திடில்அழ காக
உதித்திடு முக்கோ ணமஇதில் எல்லா
உயிர்மெய் என்றிடும் எழுத்தும் அடங்கும் 247

महाकैलासनिलया मृणालमृदुदोलता ।
महनीया दयामूर्तिर्महासाम्राज्यशालिनी ॥

आत्मविद्या महाविद्या श्रीविद्या कामसेविता ।
श्रीषोडशाक्षरीविद्या त्रिकूटा कामकोटिका ॥

कटाक्षकिङ्करीभूतकमलाकोटिसेविता ।
शिरःस्थिता चन्द्रनिभा भालस्थेन्द्रधनुःप्रभा ॥

हृदयस्था रविप्रख्या त्रिकोणान्तरदीपिका ।
दाक्षायणी दैत्यहन्त्री दक्षयज्ञविनाशिनी ॥

மஹாகைலாஸநிலயா ம்ருணாளம்ருதுதோர்லதா ।
மஹநீயா தயாமூர்த்திர் மஹாஸாம்ராஜ்யஶாலிநீ ॥

ஆத்மவித்யா மஹாவித்யா ஸ்ரீவித்யா காமஸேவிதா ।
ஸ்ரீஷோடஶாக்ஷரீவித்யா த்ரிகூடா காமகோடிகா ॥

கடாக்ஷகிங்கரீபூதகமலா கோடிஸேவிதா ।
ஶிர:ஸ்திதா சந்த்ரநிபா பாலஸ்தேந்த்ரதநு:ப்ரபா ॥

ஹ்ருதயஸ்தா ரவிப்ரக்யா த்ரிகோணாந்தரதீபிகா ।
தாக்ஷாயணீ தைத்யஹந்த்ரீ தக்ஷயக்ஞவிநாஶிநீ ॥

அன்னையாமா த்ருகை அக்ஷரங் களினால்
அமைந்தது நின்ஸ்ரீ சக்கரம் என்பர்
மாதிருகை வடிவாம் ஸ்ரீசக்கரம் இதை
மொழிவர் கைலைப் பிரஸ்தா ரம் என 248

சீரிய கைலயம் கிரிஎன் றிடும்ஸ்ரீ
சக்கரத் திருக்கும் சக்தியே போற்றி
சிரஸில் ஸஹஸ்ர தளகம லம்அதை
சிவையே கைலயம் கிரிஎனச் சொல்வர் 249

பங்கயத் தண்டென மிருதுவாய் விளங்கும்
புயங்கள் நான்குள திருவே போற்றி
பரையே ஸர்வேச் சுவரியே போற்றி
பெரிதாம் கருணைக் கடலே போற்றி 250

எவ்வுல கிற்கும் மேலாம் கைலையில்
இருந்தர சாளும் ஈச்வரி போற்றி
ஆத்ம வித்தைஎனும் ஜீவப் பிரம்ம
ஐக்கியம் ஆகும் ஞானமே போற்றி 251

அனர்த்தங் கள்எலாம் அறவே ஒழிக்கும்
அறியதா கியபெரும் வித்தையின் உருவே
அகிலவித் தைகளின் சூடா மணியாம்
அற்புதம் ஆம்ஸ்ரீ வித்தையே போற்றி 252

காமனும் நினைப்பூ சித்துல கினையே
கலக்கிடும் அரிய பலத்தினை அடைந்தான்
மிக்கவும் ரகஸியம் ஆகிய ஷோடச
அக்ஷர வித்தைநின் உருவா கும்மே 253

மூர்த்திகள் மூன்றும் அவஸ்தைகள் மூன்றும்
பீடங்கள் குணங்கள் லோகங்கள் என்றே
மும்மூன் றாகிய ஸர்வமும் நீயே
முக்கூ டையெனப் பெயர்வகிப் பாயே. 254

சக்தி சிவத்தின் ஸமரஸம்ஆகிய
சங்கரி காம கோடிநீ ஆகும்
கடைக்கண் ணால்நீ நோக்கிய பேர்க்குக்
கமலா கோடிகள் கிங்கரி ஆவர். 255

குருவாய்ப் பிர்ம ரந்த்ரம் வசிப்பாய்
குளிர்சந் திரனின் ஒளியுடன் இருப்பாய்
ஹ்ருல்லே கையாம் பிந்துவாய் நெற்றியில்
இருப்பாய் இந்திர தனுஸினை ஒப்பாய் 256

ஜகங்களின் பீஜம் ஆகிய ஹ்ருதய
ஸ்தானத்தில் ரவிபோல் நீ ஜொலித் திடுவாய்
சீருடன் மூலா தாரமுக் கோணத்
தீப சிகைபோல் நீவிளங் கிடுவாய். 257

தக்ஷன் திருமகள் தாக்ஷா யணிநீ
நக்ஷத் திரம்இரு பத்தே ழும்நீ
தைத்தியர் குலம்ஒழித் தாய்அத் தக்ஷனின்
மகத்தை அழித்த மஹேசுவரி போற்றி. 258

**ஸ்ரீ பரமானந்தவிந்துவின் ஆறும் தரங்கம் ஸம்பூர்ணம்.**

## ஏழாவது தரங்கம்

दरान्दोलितदीर्घाक्षी दरहासोज्ज्वलन्मुखी ।
गुरुमूर्तिर्गुणनिधिर्गोमाता गुहजन्मभूः ॥

தராந்தோலித தீர்காக்ஷீ தரஹாஸோஜ்வலன்முகீ ।
குருமூர்த்திர் குணநிதிர் கோமாதா குஹஜன்மபூ: ॥

பக்தரின் பீதி அகற்றும் நீண்ட
பங்கய தளம்என நேத்திரம் உடையாய்
புன்னகை இலங்கும் மதிமுகம் உடையாய்
புண்ணிய ஸ்ரீகுரு மூர்த்தியே போற்றி. 259

நாதன் மந்திரம் தேவதை
ஈசக் கரம்இவை நான்குடன் தன்னை
சேர்த்தே ஐக்கியம் செய்துணர்ந் தோர்கள்
மாப்பெரும் யோகீச்வரரே யாவர். 260

எல்லை யில்லாநற் குணங்களுக் கெல்லாம்
ஈசுவரி நீயே இருப்பிடம் ஆவாய்
ஈசனின் ஒன்பது வ்யூஹங்கள் ஆகிய
கால வ்யூஹம் குலவ்யூ ஹத்துடன் 261

நாம வ்யூஹம் க்ஞான வ்யூஹம்
சித்த வ்யூஹம் நாத வ்யூஹம்
பிந்து வ்யூஹம் கலையின் வ்யூஹம்
ஜீவ வ்யூஹம் எனும்இவை நீயே. 262

பசுக்களை ஈன்ற காம தேனுநீ
பரையே முருகக் கடவுளை ஈன்றாய்
அக்கினியில் இருந்தே உதித்தெழும் பொறிபோல்
அகில உயிர்களும் நின்னிடம் உதிக்கும். 263

देवेशी दण्डनीतिस्था दहराकाशरूपिणी ।
प्रतिपन्मुख्यराकान्ततिथिमण्डलपूजिता ॥

தேவேஶீ தண்டநீதிஸ்தா தஹராகாஶ ரூபிணீ ।
ப்ரதிபந்முக்ய ராகாந்த திதிமண்டல பூஜிதா ॥

மூர்த்திகள் மூவர்க்கும் ஈசுவரி நீயே
முக்கிய தண்ட நீதியில் இருப்பாய்

ஹ்ருதயத்தில் பிர்ம்ம புரம்எனும் தஹரா
காசம துன்வடி வாகவே இருக்குமே. 264

**ஸ்ரீதேவியின் நித்யாஷோடசிகளின் வடிவு**

ப்ரதமை முதல்பௌர் ணமிவரை உள்ள
பதினைந் தாகிய திதிகளின வடிவாம
காமே சுவரிபக மாலினி நித்ய
க்லின்னபே ருண்டை வனஹ்னி வாஸினி 265

வஜ்ரே சுவரிசிவ தூதி த்வரிதை
குலஸுந் தரியுடன் நித்யா தேவி
நீல பதாகை விஜயை ஸாவ
மங்களா ஜ்வாலா மாலினி சித்ரை 266

எனும்பதி னைந்து சக்திகள் இவர்கள்
நின்னுடன் சேர்ந்தே பதினு றுவர்
அற்புத பிந்து பீடத்தில் இவாகள்
அழகாய் நின்னைச் சுற்றிலும் ஜ்வலிப்பர். 267

இந்துவின் கலைகள் பதினைந் திவைக்கு
என்றுமே தேய்தல் வளருதல் உண்டு
க்ஷயவிருத் தியெனும் இரண்டுமே இல்லா
ஸாதாக் யாவெனும் ஷோடசீ கலைநீ. 268

कलात्मिका कलानाथा काव्यालापविनोदिनी ।

கலாத்மிகா கலாநாதா காவ்யாலாப விநோதிநீ ।

எழுதல் விழித்தல் நினைவுடன் இருத்தல்
மனத்தைத் திருப்பிச் செலுத்தல் என்னும்
நான்கிவை ஜாகர அவஸ்தையின் கலைகள்
நலமுள சகதியின அம்சமே ஆகும். 269

ஆசை மயக்கம் சிந்தை விஷய
ஞாபகம் என்னும் நான்கிவை ஸ்வப்ன
கலைகள் சக்தி சிவம் எனும் இரண்டும்
கலந்தவை யாம் எனத் தெரிந்தவர் உரைப்பர். 270

மரணம் ஞாபக மறதி மூர்ச்சை
தமஸின் வடிவாம் நித்திரை என்னும்
நான்கும் இவைகள் ஸுஷுப்தியின் கலைகள்
நாதன் ஸ்ரீபர மேசரின் அம்சம். 271

வைராக் கியமும் முமுக்ஷுவைத மனத்தின்
விமல ஸமாதி நிலையுடன் இன்னும்
ஸதஸத் தைப்பிரித் தறியும் விவேகம்
தன்னுடன் நான்கும் துரியத் தின்கலை 272

அவஸ்தைகள் நான்கின் வடிவாம் இப்பதி
னாறு கலைகளும் நின் உரு ஆகும்
கலைகளைப் பேசும் ஈசுவரி நீயே
காவ்ய ரஸங்களை ரஸிப்பவள் நீயே. 273

सचामररमावाणीसव्यदक्षिणसेविता ॥

आदिशक्तिरमेयात्मा परमा पावनाकृतिः ।

अनेककोटिब्रह्माण्डजननी दिव्यविग्रहा ॥

क्लींकारी केवला गुह्या कैवल्यपददायिनी ।

ஸசாமர ரமா வாணீ ஸவ்யதக்ஷிண ஸேவிதா ॥
ஆதிஶக்திரமேயாத்மா பரமா பாவநாக்ருதி: ।
அநேககோடி ப்ரஹ்மாண்ட ஜநநீ திவ்ய விக்ரஹா ॥
க்லீங்காரீ கேவலா குஹ்யா கைவல்யபததாயிநீ ।

சாரதையும்ஸ்ரீ தேவியும் இருபுறம்
சாமரம் வீசும் சிறப்பினை உடையாய்
ஜகங் களை உதித்திடக் காரணம் ஆகும்
சிவையே ஆதி சக்தியும் நீயே. 274

அளவிட முடியா உருவே ஜீவ
ஆத்தும வடிவே அருளே போற்றி
ஜீவரின் தேஹம் நீயே ஆவாய்
சிவனார் அவற்றின் உயிராய் நிற்பர். 275

உயிராம் ஜீவனை விடவே மிகவும்
உத்கிருஷ்டம் ஆகிய பரமாத் மா நீ
உடனே ஜீவரைப் பரிசுத்தம் ஆக்கும்
உத்தம கீர்த்தி சரித்திரம் உடையாய். 276

அறிந்தறி யாமல் புரிபா பங்கள்
அனைத்தும் நின்னை நினைத்தால் அழியும்
அன்னாய் நின்னிடம் இருந்தே அனந்த
கோடிகள் ஆம்பிர் மாண்டங்கள் உதிக்கும், 277

## ஸ்ரீதேவியின் காமபீஜத்தின் வடிவு

சும்ப னுடன்வான் நின்றே யுத்தம்
செய்த பராக்ரம சண்டிகை போற்றி
மஹிமை உளக்லீம் என்னும மன்மத
பீஜமும் நின்உரு ஆகவே இருக்கும். 278

ஓர்விதத் தர்மமும் இன்றியே ஏக
உருவாம் கேவல நிலையது நீயே
உமையே க்லீம்எனும் மன்மத பீஜம்
உள்ள ககார லகாரங்கள் என்னும் 279

மெய்யெழுத் துக்கள் இரண்டையும் நீக்கிடில்
விளங்கும் ஈம்எனும் துரிய அட்சரந்தான்
காம கலைஎனும் அக்ஷரம் இதுவே
கேவல முகதியின் நிலைஇது ஆகும். 280

நின்உரு ஆகும் காம கலையிதை
சொன்ன மெய் எழுத்தாம் இரண்டுடன் சேர்த்தே
ஜபித்திடில் தர்ம காமமோ டர்த்தம்
என்னும் மூன்றையும் மன்னவர் அடைவர். 281

மெய்யெழுத் துக்கள் இரண்டுமே இன்றி
விளங்கும் கேவல துரிய எழுத்தாம்
காம கலைதனை அறிந்தே ஜபித்திடில்
கணத்தில் நின் அருள் தன்னை அடைவர். 282

ஓர்விதத் தர்மமும் இல்லாப் பொருள்நீ
உத்தம ரஹஸிய வஸ்துவும் நீயே
மேலாம் கைவல்ய முக்தியை அளிப்பாய்
மஹிமை மிகஉள திருவே போற்றி. 283

त्रिपुरा त्रिजगद्वन्द्या त्रिमूर्तिस्त्रिदशेश्वरी ॥

த்ரிபுரா த்ரிஜகத்வந்த்யா த்ரிமூர்த்திஸ்த்ரிதமேசவரீ ॥

பிரமன் விஷ்ணு ருத்திரன் இவர்கள்
பிறந்திடும் முன்னமே இருந்தவள் நீயே
மும்மூன் றாகிய பொருள்அவை எல்லாம்
நின்உரு எனவே ஆகமம் புகலும். 284

त्र्यक्षरी दिव्यगन्धाढ्या सिन्दूरतिलकाञ्चिता ।

த்ர்யக்ஷரீ திவ்யகந்தாட்யா ஸிந்தூரதிலகாஞ்சிதா

மூஉல கங்களும் பணிந்திடும் தேவி
மும்மூர்த் திகளும் துதித்திடும் ஈசுவரி
முக்குணங் களினுல் மூவகை நிறத்தால்
சக்திகள் மூவரின் உருவினை எடுத்தாய். 285

ஸத்துவ குணத்தால் வெண்மை நிறத்தால்
சங்கரி ப்ராம்ஹீ சக்தி என் றுனுய்
ரக்த நிறத்தால் ரஜஸ் எனும் குணத்தால்
நாரணன் சக்தி வைஷ்ணவி ஆனுய். 286

தமஸெனும் குணத்தால் கருமை நிறத்தால்
தேவிநீ ரௌத்ரீ எனும் சக்தி ஆனுய்
சாம்பவி யும்ஸ்ரீ வித்தை சியாமளை
என்னும் இம் மூவரும் நின் உரு ஆவார் 287

வானிடை வசிக்கும் தேவர்க்கும் ஈசுவரி
வாக்பவ பீஜம் அனங்கனின் பீஜம்
சக்தியின் பீஜம என்னும இவற்றின்
அக்ஷரம் அனைத்தும் நின்உரு ஆகும். 288

திவ்ய பரிமள சந்தணம் அணிவாய்.
திருநெற் றியினில் குங்குமம் அணிவாய் 289

उमा शैलेन्द्रतनया गौरी गन्धर्वसेविता ॥

विश्वगर्भा स्वर्णगर्भावरदा वागधीश्वरी ।
ध्यानगम्याऽपरिच्छेद्या ज्ञानदा ज्ञानविग्रहा ॥

सर्ववेदान्तसंवेद्या सत्यानन्दस्वरूपिणी ।
लोपामुद्रार्चिता लीलाक्लृप्तब्रह्माण्डमण्डला ॥

உமா ைஶலேந்த்ரதநயா கௌரீ கந்தர்வஸேவிதா ॥

விஶ்வகர்பா ஸ்வர்ணகர்பாவரதா வாகதீஶ்வரீ ।
த்யாநகம்யாऽபரிச்சேத்யா ஞாநதா ஞாநவிக்ரஹா ॥

ஸர்வவேதாந்தஸம்வேத்யா ஸத்யானந்தஸ்வரூபிணீ ।
லோபாமுத்ரார்சிதா லீலாக்லுப்த ப்ரஹ்மாண்டமண்டலா ॥

**உமா நாமத்தின் பொருள்**

சிவத்தினை அடையத் தவத்தைப் புரியநீ
சிவையே புறப்படும் சமயம் நின்தாய்
தடுத்தே குழந்தாய் செலவேண் டாம்என
உரைத்தனள் அதனால் உமைநீ ஆனாய் 290

ஓம்காரத்துள உகரம் மகரம்
அகரமும் சேர்ந்தே உமைஎனல் ஆகும்
பிரணவ மேஉமை என்பதன் பொருள்எனப்
புகலும் ஆகமம் ரகஸிய மாக. 291

தஹரா காய வடிவாய் இருக்கும்
சிவமாம் லிங்கச் சிரம்தனில் விளங்கும்
சந்திர கலையே அர்த்த மாத்திரை
அதுவே நாத உருஎனல் ஆகும். 292

செப்பிய இதுவே சப்த ப்ருமம்
என்றும் ஹ்ருதயம் தனில்ஸ்வய மாக
ஒலித்திடும் இந்த அனாஹத த்வனியே
உமைஎன ஆகம ரஹஸியம் உணர்த்தும். 293

ஹ்ருதயம் தனில்எண் தளமுள பத்மம்
இருந்திடும் ஜீவன் என்றிடும் ஹம்ஸன்
ஒவ்வொரு தளந்தனில் இருந்திடும் போததற்
குரித்தாம் சித்த வ்ருத்தியை அடைவான். 294

கேஸரம் தன்னில் ஹம்ஸம் நின்றிடில்
கண்டிடும் பலவகைச் சொப்பனங் களைத்தான்
லிங்கம் அதன்நடு தஹரா காயத்தில்
நிற்கையில் ஸுஷுப்தி நிலைதனை அடையும். 295

பங்கயம் இதனை அறவே விடுத்து
லிங்கத்தில் இருக்கில் துரியம துண்டாம்
லிங்க சிரஸுள இந்துவின் கலையாம்
உமைஎனும் நாத கலைதனில் நிற்கில் 296

லயந்தனை அடைந்த துரியா தித
நிலை அது உண்டாம் எனமறை புகலும்
சிவையே பர்வத ராஜரின் புத்ரீ
செம்பொன் நிறம் உள கௌரியே போற்றி. 297

விசுவா வஸுமுதல் ஆம்கந் தர்வ
ராஜர் பணியும் பதமலர் உடையாய்
விசுவம் அனைத்தையும் கர்பத்தில் வைத்தாய்
விளங்கும் ஸ்வர்ண கர்ப்பையே போற்றி. 298

அரக்கர் குலத்தை அழிப்பாய் வாக்கின்
அதிபதி ஆகிய அம்மையே போற்றி
தியானத்தி னால் உனை அடைந்திடல் ஆகும்
துண்டிக்க ஒண்ணுப் பூரணி போற்றி. 299

பிர்ம்ம ஞானம் அளித்திடும் குருவே
பரையே பிர்ம்ம ஞானத்தின் உருவே
மறைசிரம் எல்லாம் அறிவித் திடும்நல்
மஹிமை உளபரப் பிர்ம்மமே போற்றி. 300

அழிவில் லாமலும் ஆனந்த மாகவும்
அன்னுய் நின்திரு உருவது இருக்கும்
அன்புட னேநினை லோபா முத்திரை
அர்ச்சனை செய்திட அனுக்ரஹம் செய்தாய். 301

நின்னுரு ஆகும் சுவரினில் நீயே
லீலையி னல்பிர்ம் மாண்டங் கள்தமை
சித்திரம் எனவே தீட்டியே பார்ப்பாய்
திருப்திகொண் டவற்றைத் திரும்பவும் அழிப்பாய்.

अदृश्या दृश्यरहिता विज्ञात्री वेद्यवर्जिता ।
योगिनी योगदा योग्या योगानन्दा युगन्धरा ॥

इच्छाशक्तिज्ञानशक्तिक्रियाशक्तिस्वरूपिणी ।
सर्वाधारा सुप्रतिष्ठा सदसद्रूपधारिणी ॥

அத்ருஶ்யா த்ருஶ்யரஹிதா விஞாத்ரீ வேத்யவர்ஜிதா ।
யோகிநீ யோகதா யோக்யா யோகானந்தா யுகந்தரா ॥

இச்சாஶக்திஞானஶக்திக்ரியாஶக்திஸ்வரூபிணீ ।
ஸர்வாதாரா ஸுப்ரதிஷ்டா ஸதஸத்ரூபதாரிணீ ॥

நிர்க்குண ரூபி நீயாம் அதனால்
நேத்திரத் தால் உனைப் பார்த்திடல் ஆமோ
நித்திய மாம்பர மார்த்தப் பொருள் நீ
நின்னிடைத் திருச்யம் அணுவுமே இல்லை 303

அனைத்தையும் நீயே அறிபவள் ஆவாய்
அறிபவர் நின்னை ஒருவரும் இல்லை
அரிதா கியசிவ ராஜயோ கம்நீ
அடியருக் கந்த யோகம் அருள்வாய். 304

க்ஷேத்திர க்ஞன்பர மாத்மா இவரின்
சிவையே ஐக்ய பாவம் தனையே
யோகம் எனஉரைத் திடுவர் நீ இந்த
யோகம் அதற்குத் தக்கவள் ஆவாய் 305

விஷ்ணுவின் நேத்திரங் களில்உள யோக
நித்திரை யாம்யோ கானந்தம் நீயே
நால்வகை யுகமாம் காலம வஹிப்பாய்
நலம்உள இச்சை ஞானம் க்ரியை என. 306

சக்திகள் மூவரும் நீயே இவர்உன்
சிரம்உடல் பாதம் எனும் உறுப் பாவர்
ஸகல ஜகங்களின் ஆதா ரம் நீ
சோபந மான அதிஷ்டா னம்நீ. 307

ஸத்தாம் பிர்மம் நீயே ஆவாய்
அஸத்தெனும் ஜகத்தும் நீயே ஆவாய்
பாவா பாவம் எனும் இரண் டினுக்கும்
பகவதி நீஅதிஷ் டானம தாவாய். 308

**ஸ்ரீ தேவியின் அஷ்டமூர்த்தி வடிவம்**

अष्टमूर्तिरजाजैत्री लोकयात्राविधायिनी ।

அஷ்டமூர்த்திரஜாஜைத்ரீ லோகயாத்ராவிதாயிநீ ।

பூதங்கள் ஐந்துடன் ஜீவாத் மாமதி
பாஸ்கரன் எனவே பகர்ந்திடும் இவைகள்
பரனின் மூர்த்திக ளாம்இவை எட்டும்
பரையே நீஇவர் பெண்டிரும் நீயே. 309

ஜீவாத் மா அந்த ராத்மா, பரம
ஆத்மா, நிர்மல ஆத்மா, சுத்த
ஆத்மா, ஞான ரூபாத் மா மஹா
ஆத்மா, பூத ஆத்மா எனவே 310

ஒன்றும் ஆத்மா குண பேத தத்தால்
எண் வகை ஆம்இவை அனைத்தும் நீயே·
குல அஷ் டகம என ரகஸியம் ஆக
கூறும் எண்வகைக் கோதையர் நீயே 311

அவனி யுடன் நீர் அக்கினி வாயு
ஆகா யம் மனம் புத்திகள் உடனே
அஹங்கா ரம் என உரைக்கும் எணவகை
அபர ப்ரகிருதியும் அம்மை நீ ஆகும் 312

அவித்தை ஆகிய அஜையை ஜயித்தவள்
அகில சராசரம ஆகிய ஜகத்தைக்
காத்தல் அழித்தல் என்றிடும் லோக
யாத்திரை நடத்தும் நாயகி போற்றி 313

एकाकिनी भूमरूपा निर्द्वैता द्वैतवर्जिता ॥
अन्नदा वसुदा वृद्धा ब्रह्मात्मैक्यस्वरूपिणी ।

ஏகாகினீ பூம ரூபா நிர்த்வைதா த்வைத வர்ஜிதா ॥
அந்நதா வஸுதா வ்ருத்தா ப்ரஹ்மாத்மைக்ய ஸ்வரூபிணீ ।

தன்னந் தனியாய் நீ இருந் திடுவாய்
ஜகங்களைப் படைப்பாய் காப்பாய் துடைப்பாய்
நினது விபூதிகள் ஆகிய ஜகங்கள்
நின்னிடம உதிக்கும் நின்னிடம் லயிக்கும் 314

உபாதி வசத்தால் உமையே பற்பல
உருவம் எடுத்தே விளங்குவை போற்றி.
உவமை இலாபிர் மானந்தம் எனவே
உரைக்கும் பூமா சுகமே போற்றி. 315

ஏகப் பொருளாய் இருந்திடும் நின்னிடை
இதரப் பொருள்எக் காலுமே இல்லை
உயிர்களுக் கெல்லாம் உணவளித் திடுவாய்
உமையே பக்தருக் கைச்வர்யும் அளிப்பாய் 316

உத்பத்தி உனக்கில்லையாம் அதனால்
என்றும் நீ பெரும் கிழவியே ஆவாய்
ஆத்மா பிரம்மம் எனும் இவ் இரண்டின்
ஐக்கியம் அதுவே நின் உரு ஆகும் 317

அஜபை ஆகிய ஹம்ஸ மந்திரத்தில்
அமைந்த ஹகாரம் ஜீவன துருவாம்
சக்தியின் வடிவு ஸகாரமே ஆகும்
ஸ்ரீபர மேசரும் அதுவே ஆவர் 318

சராசரம் ஆகிய ஸர்வ ஜகங்களும்
ஜனித்து ஸகாரத் தில் லயித் தொடுங்கும்
ஜீவ உபாதி ஹகாரம் நீக்கிடில்
ஜீவன் இவன் சிவன் ஆகவே நிற்பன். 319

बृहती ब्राह्मणी ब्राह्मी ब्रह्मानन्दा बलिप्रिया ॥

ப்ருஹதீ ப்ராஹ்மணீ ப்ராஹ்மீ ப்ரஹ்மானந்தா பலிப்ரியா ।

பெரிதுக் கெல்லாம் நீ பெரி தாவாய்
ப்ருஹத் எனும் ஸாமம் நின் உரு ஆகும்
ப்ராம்ஹணர் ஆகிய ஸ்ரீ பர மேசரின
பத்தினி உத்தமி பகவதி போற்றி 320

பிரம்மனின் பத்தினி வாணியே போற்றி
பெரிதாம் பிர்ம்மா னந்தமே போற்றி
அவித்தையை ஜயித்த வீரர் இடம் மிக
அன்புள அன்னாய் நின்னடி போற்றி 321

भाषारूपा बृहत्सेना भावाभावविवर्जिता ।

பாஷா ரூபா ப்ருஹத் ஸேனா பாவா பாவ விவர்ஜிதா

பாஷைகள் எல்லாம் நின் உரு ஆகும்
பெரிதாம் நால்வகைப படைகளும் நீயே
பாவா பாவம் இரண்டும் அற் றவள் நீ
பார்வதி அவற்றிற காச்ரயம் நீயே. 322

सुखाराध्या शुभकरी शोभना सुलभा गतिः ॥

राजराजेश्वरी राज्यदायिनी राज्यवल्लभा ।

राजत्कृपा राजपीठनिवेशितनिजाश्रिता ॥

राज्यलक्ष्मीः कोशनाथा चतुरङ्गबलेश्वरी ।

ஸாகாராத்யா ஸபகரீ ஸோபநா ஸுலபா கதி : ||

ராஜ ராஜேச்வரீ ராஜ்ய தாயிநீ ராஜ்ய வல்லபா |
ராஜத் க்ருபா ராஜபீட நிவேஶித நிஜாச்ரிதா ||

ராஜ்ய லக்ஷ்மீ : கோஶநாதா சதுரங்க பலேச்வரீ |

மிகவும் சுகமாய் நினைப்பு சிக்க
முடியும் எனவே ஆகமம் மொழியும்
சுபத்தைக் கொடுப்பாய் சோபனம் எனவே
சொல்லும் முக்தியை நீயே அளிப்பாய். 323

கஷ்டம் இல்லாமல் மிகவும் எளிதாய்
கல்யாணீ நினை அடைந்திடல் ஆகும்
உத்தமம் ஆகிய கதியது நீயே
உமையே ராஜரா ஜேசுவரியே. 324

ராஜ்யமும் விஷ்ணுவின் உலகும் அளிப்பாய்
நலம் உள கைலைப் பதவியும் கொடுப்பாய்
ராஜ்யம் தனில் மிக அன்புடையாள் நீ
எங்கும் விளங்கும் கருணைக் கடல் நீ 325

பரையே நினைப்பு சித்த பேர்களைப்
பரிவுடன் ராஜபீடத்தில் ஏற்றுவை
ராஜரின் ஸம்பத் தாகிய ராஜ்ய
லக்ஷ்மி அவர்பொக் கிஷமும் நீயே 326

ரதகஜ துரக பதாதிகள் என்னும்
நால்வகைப் படைக்கும் நாயகி போற்றி
நாரணனின்சதுர் வ்யூஹம் அதற்கும்
நாயகி ஆம்பர மேசுவரீ போற்றி 327

தேவீ சரீர புருடன் சந்தஸ்
புருடன் வேத புருடன் மாப்பெரும்
புருடன் எனவே நால்வகை ஆன
புருடருக் கும் அதி பதியே போற்றி 328

साम्राज्यदायिनी सत्यसन्धा सागरमेखला ॥

ஸாம்ராஜ்ய தாயினீ ஸத்யஸந்தா ஸாகர மேகலா ||

மிக்கவும் அரிதாம் ஸாம்ராஜ் யம்எனும்
மண்டலா திபதி பாக்கியம் அளிப்பாய்
ஸத்திய ஸந்தை நீயே ஆவாய்
ஸாகர மேகலைப் பூமியும் நீயே 329

दीक्षिता दैत्यशमनी सर्वलोकवशंकरी ।
सर्वार्थदात्री सावित्री सच्चिदानन्दरूपिणी ॥

தீக்ஷிதா தைத்ய ஶமனீ ஸர்வலோக வஶங்கரீ ।
ஸர்வார்த்த தாத்ரீ ஸாவித்ரீ ஸச்சிதானந்த ரூபிணீ ॥

தீக்ஷை உடையோர் நின்வடி வாவர்
தைத்திய ரின் குல நாசினி போற்றி
அகில ஜகங்களும் நின்வசம் இருக்கும்
அகில வரங்களும் நின்னால் கிடைக்கும். 330

மறைகள் போற்றும் ஸாவித்ரி நீயே
மகிமை உள ஸச் சிதானந் தம்மே. 331

ஏழாவது தரங்கம் முற்றிற்று

## எட்டாவது தரங்கம்

देशकालापरिच्छिन्ना सर्वगा सर्वमोहिनी ।
सरस्वती शास्त्रमयी गुहाम्बा गुह्यरूपिणी ॥

தேஶகாலாபரிச்சிந்நா ஸர்வகா ஸர்வ மோஹிநீ ।
ஸரஸ்வதீ ஶாஸ்த்ரமயீ குஹாம்பா குஹ்ய ரூபிணீ ॥

தேசம் காலம் வஸ்துக்க ளால்பரிச்
சேதம்அற் றெங்கும் வியாபித்து நிற்பாய். 332

ஏகப் பொருளாம் பிர்ம்மம் நாநா
பேதம் உள ஜகம் போலவே தோன்றிடச்
சீவரின் மனத்தை மயக்கிடும் மோஹினி
ஞான ஸமுத்திர வாணியே போற்றி. 333

ஜீவேசு வரரின் பேதம் ஒழித்தே
ஜீவப் பிரம்ம ஐக்கியம் அளிக்கும்
ஈசுவரி மாமறைச் சிரங்களும் நீயே
இருந்திடு வாய் அறி வாம்குகை நடுவில். 334

மிக்கவும் ரகஸியம் ஆய்ஹ்ரு தயந்தனில்
மறைந்து நின் றேவிக் ஞான வடிவாய்
தக்க பொழுதினில் ஸ்ரீ குரு வடிவாய்
பக்தருக் காத்ம வித்தையை உரைப்பாய். 335

सर्वोपाधिविनिर्मुक्ता सदाशिवपतिव्रता ।

ஸர்வோபாதிவிநிர்முக்தா ஸதாசிவபதிவ்ரதா ।

உபாதிகள் அற்ற ஸதாசிவ பத்னீ
உமையே தர்மம் தர்மி எனும் இரு
பாவங் களில்நீ தர்மமே ஆவாய்
பதியாம் சிவமே தர்மீ ஆவார். 336

संप्रदायेश्वरी साध्वी गुरुमण्डलरूपिणी ॥

ஸம்ப்ரதாயேச்வரீ ஸாத்வீ குருமண்டல ரூபிணீ ॥

சிஷ்ய பரம்பரை யாக வரும்ஸ்ரீ
வித்தையின் ஸம்ப்ர தாயத் தீச்வரீ
செப்ப ஒண்ணுப்பர அஹந்தை வடிவே
சிவையே சின்மய வடிவே போற்றி. 337

### ஸ்ரீ தேவியின் காமகலை அக்ஷரவடிவம்

அகரம் எனும்முதல் எழுத்தது ஹரியாம்
அப்புரம் நான்காம் அக்ஷரம் ஆம்ஈ
சக்தியின் உருவாம் இவ்வெழுத் திரண்டும்
சேர்ந்திடில் ஹரியும் கௌரியும் ஆவர். 338

அதனுல் ஸ்ரீ ஹரி ஸோதரி நீஎன
ஆகம சாஸ்திர புராணம் உரைக்கும்
அதிரக ஸியமாம் காம கலையெனும்
அக்ஷரத் தில்நீ ஹரியுடன் இருப்பாய். 339

பெண்உரு கூறுய் இருந்திடும் நின்னைப்
பரனின் பார்யை எனவே புகல்வர்
ஆண்கூ றுகிய ஹரியை ஜகத்தின்
உபாதா னம்எனும் காரணம் என்பர். 340

சக்தி சிவம்ஹரி என்னும் மூவரும்
சேர்ந்தே ஐக்யம் அடைந்திடில் அதுவே

அன்றாய் அகண்ட அத்வை தப்பிர்மம்
ஆம்என ஆகம ரஹஸியம் உரைக்கும். 341

காம கலைஎனும் ரஹஸியம் இதனை
கர்ண பரம்பரை உபதே சத்தால்
கல்யா ணிகுரு உருவாய் நீயே
கருணை யுடன் அடி யர்க்கருள் வாயே. 342

ஸ்ரீநா தர்முதல் மாலினி வரைஉள
சிறந்த ஸ்ரீகுரு மண்டலம் ஆவாய்

कुलोत्तीर्णा भगाराध्या माया मधुमती मही ।
गणाम्बा गुह्यकाराध्या कोमलाङ्गी गुरुप्रिया ॥

குலோத்தீர்ணா பகாராத்யா மாயா மதுமதீ மஹீ ।
கணாம்பா குஹ்யகாராத்யா கோமளாங்கீ குருப்ரியா ॥

சுரோத்திரம் முதலாம் புலன்களை எல்லாம்
கடந்தே அப்பால் நீஇருந் திடுவாய். 343

ஸூரிய மண்டல மத்தியில் த்ரிபுர
ஸுந்தரி நின்னை யோகிகள் காண்பர்
பகம்எனக் கூறும் முக்கோ ணம்அதாய்
பகவதி ஏ எனும் அக்ஷரம் இருக்கும். 344

அகரம் எனும்முதல் அக்ஷரம் சிவமாம்
அம்மை நீயே ஈஎனும் எழுத்தாம்
சக்தி சிவங்களின் அக்ஷரம் இரண்டும்
சேர்ந்திடில் ஏஎனும் அக்ஷரம் உதிக்கும். 345

பகவடி வாகிய ஏகா க்ஷரம் இது
ப்ரபஞ்சம் அனைத்தின் பீஜமே ஆகும்
பிர்மாண் டங்களின் கோடிகள் எல்லாம்
பிறந்திடும் யோனி இதுவெனச் சொல்வர். 346

பகவடி வாகும் முக்கோ ணம்இதில்
பூஜிப்பர் நின்னை ஆகமம் உணர்ந்தோர்
சக்தி சிவத்தின் ஸம்மே ளனம்என
சொல்லும் ஏஎனும் அக்ஷரம் நீயே. 347

மறைக்கும் மாயா சக்தியே போற்றி
மதுவெனத் தெவிட்டா வஸ்துவே போற்றி

மிக்கவும் பெரிதாம் அவனியின் உருவே
மகிமை உளகண நாயகி போற்றி. 348

ஒருவரும் இல்லா ரஹஸிய இடத்தில்
உபாஸிப் பர்களை உமையே அறிந்தோர்.
கோமளம் ஆகிய அங்கங்கள் உடையாய்
குருவாம் சிவத்தின் மீதன் புடையாய் 349

स्वतन्त्रा सर्वतन्त्रेशी दक्षिणामूर्तिरूपिणी ।

ஸ்வதந்த்ரா ஸர்வ தந்த்ரேசீ தக்ஷிணாமூர்த்தி ரூபிணீ

ஸர்வஸ்வ தந்திரம் உள்ளவள் நீயே
சிவமும் நின்வசம் ஆகியே நிற்பர்
அறுபத்து நான்கு தந்திரங் களுக்கும்
அதிபதி நீயே ஆவாய் போற்றி. 350

தக்ஷிண திக்கை நோக்கியே ஆல
மரத்தின் அடியில் வீற்றிருந் தேசின்
முத்திரை வகிக்கும் ஸ்ரீகுரு நாதன்
தக்ஷிணா மூர்த்தியும் நீயே ஆவாய் 351

सनकादिसमाराध्या शिवज्ञानप्रदायिनी ॥

ஸநகாதி ஸமாராத்யா சிவஞாந ப்ரதாயினீ ॥

ஸனகா தியருடன் ஸித்தர் முனிவரும்
சேவடி போற்றும் சிறப்பினை உடையாய்
சின்மாத் திரமாய்ச் சாந்தமாய்ச் சுத்தம்
ஆகிய சிவத்தை அறிந்திட எண்ணில் 352

ஸ்பந்த ஸ்வரூபம் ஆகிய சக்தியின்
மூலமே தானது ஆமெனச் சொல்வர்
அரிதா கியசிவ ஞானம் அளித்திடும்
அற்புத ஸ்பந்த சக்தியே போற்றி. 353

चित्कलानन्दकलिका प्रेमरूपा प्रियंकरी ।

नामपारायणप्रीता नन्दिविद्या नटेश्वरी ॥

சித்கலாநந்த கலிகா ப்ரேம ரூபா ப்ரியங்கரீ ।

நாம பாராயண ப்ரீதா நந்தி வித்யா நடேச்வரீ ॥

ஜீவர் உளத்தில் உபா!
சைதன் யம்எனும் சித்கலே நீயே
அன்னாய் கூறிய சைதன் யம்இதன்
ஆனந்த மதுவும் நீயே ஆவாய். 354

ப்ரேமையின் உருவே பகவதீ போற்றி
பக்தர்கு நலமே புரியும் ஈசுவரி
பக்தி யுடன்நின் ஸஹஸ்ரநா மத்தைப்
படிக்கில் நினக்கது பிரியமே ஆகும். 355

பக்தி யுடன்ஸ்ரீ நந்திபூ சித்த
வித்தை யதும்நீ ஆவாய் போற்றி
அத்தன் ஸ்ரீநட ராஜரின் பத்னீ
அவருடன் சேர்ந்தே நடிக்கும் ஈசுவரி 356

मिथ्याजगदधिष्ठाना मुक्तिदा मुक्तिरूपिणी ।

மித்யா ஜகததிஷ்டாநா முக்திதா முக்தி ரூபிணீ ।

பழுதையில் அரவினைப் போலவே எல்லாப்
பிரபஞ்சமும் நின்னிடை கல்பிதம் ஆகும்
பொய்யாம உலகிற் கதிஷ்டா னம் நீ
பக்தர்கு முக்தி அளிப்பவள் நீயே 357

அவித்யை எனும்திரை மூடி இருப்பதால்
ஆத்மா னந்தம் விளங்குவ தில்லை
வித்தையி னால்திரை தக்தமே ஆகில்
விளங்கிடும் ஆத்மா னந்தம்அப் பொழுதே. 358

ஆத்மா னந்த அனுபவம் இதையே
அரிதாம் முக்திஎன் றறிந்தோர் உரைப்பர்
அழியா ஆத்மா னந்தம தாகும்
அந்த முக்தியும் நின்னுரு வேயாம் 359

लास्यप्रिया लयकरी लज्जा रम्भादिवन्दिता ॥

லாஸ்ய ப்ரியா லய கரீ லஜ்ஜா ரம்பாதி வந்திதா ॥

நர்த்தனம் தன்னை மிகவிரும் புவை நீ
லயத்தினைச் செய்யும் நாயகி போற்றி
லஜ்ஜை என்றிடும் ஹ்ரீம்பீ ஜம்நீ
ரம்பை முதலோர் ஏற்றிடும் ஈசுவரி. 360

भवदावसुधावृष्टिः पापारण्यदवानला ।

பவதாவ ஸுதா வ்ருஷ்டி: பாபாரண்ய தவாநலா |

பிறப்பெனும் காட்டுத் தீயினைக் கிருபையால்
பொட்டென அணைக்கும் அமுத மழையே
பாபங்கள் ஆகும் பயங்கர வனங்களைப்
பொசுக்கி எரிக்கும் பெரிதாம் நெருப்பே. 361

दौर्भाग्यतूलवातूला जराध्वान्तरविप्रभा ॥

தௌர்பாக்ய தூல வாதூலா ஜரா த்வாந்த ரவிப்ரபா ||

துர்ப்பாக்கியம்ஆம் பஞ்சுக் குவியலை
சிதற அடிக்கும் பெருஞ்சுழல் காற்றே
ஜரைஎனும் இருளை அறவே ஒழிக்கும்
ஜொலிக்கும் ஸூரிய மண்டல ஒளியே. 362

भाग्याब्धिचन्द्रिका भक्तचित्तकेकिघनाघना ।

பாக்யாப்தி சந்த்ரிகா பக்த சித்த கேகி கநாகநா ।

பாக்கியம் ஆகும் சமுத்திரம் அதனைப்
பொங்கி எழும்படச் செய்திடும் நிலவே
பக்தரின் சித்தம் என்றிடும் மயில்கள்
பார்த்து மகிழ்ந்தே ஆடும் முகிலே. 363

रोगपर्वतदम्भोलिर्मृत्युदारुकुठारिका ॥

ரோக பர்வத தம்போளிர் ம்ருத்யு தாரு குடாரிகா ||

நோய்கள் எனும்பெரும் மலைகளை எல்லாம்
நொடியில் பிளந்திடும் வஜ்ரா யுதமே
மிருத்யு எனும்வான் அளவும் மரத்தை
வேருடன் வெட்டி வீழ்த்திடும் மழுவே. 364

महेश्वरी महाकाली महाग्रासा महाशना ।
अपर्णा चण्डिका चण्डमुण्डासुरनिषूदिनी ॥

மஹேச்வரீ மஹாகாளீ மஹாக்ராஸா மஹாஶநா ।
அபர்ணா சண்டிகா சண்ட முண்டாஸுர நிஷூதினீ ||

மஹேசச் வரிகா லன்தனை விழுங்கும்
மாபெருங் காளீ தேவியே போற்றி
சராசரம் ஆம்இப் பிரபஞ்சம் அனைத்தும்
சங்கரி நினக்கோர் கவளமே ஆகும். 365

பிரபஞ்சம் அனைத்தும் பேர்உண வாக
புசிப்பாய் நீஎன ஆகமம் உரைக்கும்
பழுத்தே உதிர்ந்திடும் இலையினைக் கூடப்
புசியா அபர்ணை நீ என்றும் உரைக்கும். 366

சண்டி எனும்பெருங் கோபியே போற்றி
சண்டமுண் டாஸுர மர்த்தனி போற்றி

क्षराक्षरात्मिका सर्वलोकेशी विश्वधारिणी ।
त्रिवर्गदात्री सुभगा त्र्यम्बका त्रिगुणात्मिका ॥

க்ஷராக்ஷராத்மிகா ஸர்வ லோகேசீ விச்வதாரிணீ ।
த்ரிவர்க தாத்ரீ ஸுபகா த்ர்யம்பகா த்ரிகுணாத்மிகா ॥

க்ஷரம் எனும் அழியும் பொருள்களும் நீயே
சிவையே அழியா அக்ஷரம் நீயே 367

உலகினுக் கெல்லாம் ஈசுவரீ போற்றி
உலகினை எல்லாம் வகித்தனை போற்றி
சிறந்ததர் மார்த்த காமம் அளிப்பாய்
சோபன மாம்பகம் உடையாய் போற்றி. 368

பரிதியின் மண்டல மத்தியில் இருப்பாய்
பரையே ரவிக்கும் ஒளியினைக் கொடுப்பாய்
நின்உரு ஆகும் ஸுமங்கலீ பூஜையை
பண்ணிடு வோர்க்குப் பாக்கியம் அளிப்பாய், 369

மூர்த்திகள் மூவரை ஈன்றிடு ஜனனீ
முக்குணங் கள்ஸமம் ஆகிய நிலைநீ

स्वर्गापवर्गदा शुद्धा जपापुष्पनिभाकृतिः ।
ओजोवती द्युतिधरा यज्ञरूपा प्रियव्रता ॥

ஸ்வர்காபவர்கதா ஶுத்தா ஜபாபுஷ்ப நிபாக்ருதி: ।
ஓஜோவதீ த்யுதிதரா யஜ்ஞரூபா ப்ரியவ்ரதா ॥

புண்ணிய பலனும் ஸ்வர்க்கமும் அளிப்பாய்
பிறவா நித்திய முக்தியும் கொடுப்பாய். 370

அவித்தை என்னும் அழுக்கற்றவள்நீ
அழகுசெம் பரத்தை மலர்போல் இருப்பாய்
ஓஜஸ் எனும் ஒளி வீசும் தாதுநீ
உவமை இலாப்பெருங் காந்தியை உடையாய். 371

யக்ஞ ஸ்வரூபி ஆகும் விஷ்ணுநீ
எல்லா விரதங்களின் தெய்வமும் நீயே

दुराराध्या दुराधर्षा पाटलीकुसुमप्रिया ।
महती मेरुनिलया मन्दारकुसुमप्रिया ॥

துராராத்யா துராதர்ஷா பாடலீ குஸும ப்ரியா ।
மஹதீ மேருநிலயா மந்தார குஸும ப்ரியா ॥

நினை ஆராதித்தல் அரிதே ஆகும்
நின்னைத் தடுப்போர் ஒருவரும் இல்லை. 372

பாதிரிப் பூவை நீவிரும் பிடுவாய்
பெரிதினுக் கெல்லாம் நீபெரி தாவாய்
பெருமை மிகும்மஹா மேருவில் வசிப்பாய்
பரையே ஒன்பது எழுத்துக்க ளான 373

மேருவட் சரங்களி னுல்உதித் திடுஸ்ரீ
சக்கரம் அமரும் சங்கரீ போற்றி
மலர்ந்தமந் தாரை மலர்களை விரும்பும்
மஹேசுவரி ஸ்ரீத்ரிபு ரேசுவரீ போற்றி. 374

वीराराध्या विराड्रूपा विरजा विश्वतोमुखी ।

வீராராத்யா விராட்ரூபா விரஜா விச்வதோமுகீ ।

உலகினை மறந்த வீரர் தெய் வம்நீ
உமையே தூல விராட் டென் பதும்நீ
அற்பமும் பாபம் இலாதவள் நீஎப்
பக்கமும் முகம்உள பகவதி போற்றி. 375

प्रत्यग्रूपा पराकाशा प्राणदा प्राणरूपिणी ॥

ப்ரத்யக்ரூபா பராகாசா ப்ராணதா ப்ராணரூபிணீ ॥

அந்தர் முகமாய் அறிந்திடும் தத்வம்
அன்னாய் பரம வ்யோம ஸ்வரூபிணீ
பிராணன் புலன்கள் இவற்றை ஜீவருகுப்
பரிவுடன் நீயே அளித்தனை போற்றி. 376

பிர்ம்ம ஸ்வரூபி ஆகிய நின்னை
பிராணன் எனவும் மறைச்சிரம் உரைக்கும்

मार्ताण्डभैरवाराध्या मन्त्रिणीन्यस्तराज्यधूः ।

மார்த்தாண்ட பைரவாராத்யா மந்த்ரிணீ ந்யஸ்த ராஜ்ய துர:।

பெருமை மிகஉள மார்த்தாண்டர் எனும்
பைரவ ராம்ரவி நினைப்பணிந் திடுவர் 377

ராஜ்ஜிய பாரம் அனைத்தையும் மந்த்ரிணீ
நாயகி இடமே வைத்துன் ஆக்கினை
முத்திரை மோதிரம் அவளிடம் கொடுத்தே
சொஸ்தமாய் நின்பதி மடிமேல் இருப்பாய். 378

त्रिपुरेशी जयत्सेना निस्त्रैगुण्या परापरा ॥

த்ரிபுரேஶீ ஜயத்ஸேநா நிஸ்த்ரைகுண்யா பராபரா ॥

ஸர்வா சாபரி பூரக சக்ர
ஸ்வாமினி யாம்த்ரிபு ரேசியே போற்றி
அஸுரரை எல்லாம் வென்றே ஜயம்கொண்ட
அற்புத ஸேனைக் கதிபதி போற்றி. 379

முக்குணம் அற்ற மஹேசுவரி போற்றி
பராபரம் அபரம் பரம் என உரைக்கும்
பலவகைப் பொருள்கள் நீயே மகிமை
பொருந்திய சக்திகள் மூவரும் நீயே 380

सत्यज्ञानानन्दरूपा सामरस्यपरायणा ।

कपर्दिनी कलामाला कामधुक्कामरूपिणी ॥

ஸத்யஞானானந்த ரூபா ஸாமரஸ்ய பராயணா ।
கபர்திநீ கலாமாலா காமதுக் காமரூபிணீ ॥

நீயே அழியாப்பொருள் எனும் ஸத்யம்
நீயே அறிவெனும் ஸம்வித் துருவம்
நித்தியா னந்த வடிவாம் நின்னை
ஸத்திய ஞான னந்தை என் றுரைப்பர். 381

சக்தியும் சிவமும் சமமாய் நிற்கும்
ஸமரஸம் என்னும் நிலை நீ ஆவாய்
கபர்த்தம் எனும் ஜடை தரித்திடு நீல
கண்டர் மகிழும் கௌரியே போற்றி 382

கலைகளை மாலைகள் ஆக நீ பூண்டனை
கருணை யுடன் அடி யார்க்கு வரங்களை
அளித்திடும் காம தேனுநீ ஆவாய்
அன்னாய் விரும்பிடும் உருவினைக் கொள்வாய் 383

कलानिधिः काव्यकला रसज्ञा रसशेवधिः ।

கலா நிதி: காவ்ய கலா ரஸஜ்ஞா ரஸ ஶேவதி: ।

கலைகளுக் கெல்லாம் இருப்பிடம் நீயே
காவ்ய கலைகள்எல் லாம்நின் உருவே
திவ்ய ரஸங்களை அறிபவள் நீயே
தெவிட்டாப் பிர்மம் ரஸநிதி நீயே 384

ஸ்ரீ பரானந்த ஸிந்துவில் எட்டாவது தரங்கம் ஸம்பூர்ணம்.

## ஒன்பதாவது தரங்கம்

पुष्टा पुरातना पूज्या पुष्करा पुष्करेक्षणा ॥

புஷ்டா புராதநா பூஜ்யா புஷ்கரா புஷ்கரேக்ஷணா ॥

ஆறு ருகிய தத்துவம் எல்லாம்
அழகிய நின் திரு உருவே ஆகும்
அனைவருக் கும்முன் இருப்பவள் அதனால்
அன்னாய் நின்னை அனைவரும் தொழுவர் 385

எல்லா உயிர்க்கும் புஷ்டி அளிப்பாய்
இந்தீ வரம்என நேத்திரம் உடையாய்
ப்ரளய ஜலத்தில் ஆலிலைப் படுத்த
பாலன் ஹரிக்குப தேசமும் செய்தாய் 386

परं ज्योतिः परं धाम परमाणुः परात्परा ।

பரம்ஜ்யோதி: பரம்தாம பரமாணு: பராத்பரா ।

ஸூரியன் முதலாம் ஜோதிகட் கெல்லாம்
ஜோதி தரும்பரம் ஜோதியே போற்றி
உத்க்ருஷ்டம் எனவே உரைக்கும் மேலாம்
உமையே ஸ்தானமும் நீயே போற்றி 387

பரையே நுட்ப அணுவுக்கும் அணுநீ
பெரியதற் கெல்லாம் பெரியதும் நீயே

पाशहस्ता पाशहन्त्री परमन्त्रविभेदिनी ॥
मूर्ताऽमूर्ताऽनित्यतृप्ता मुनिमानसहंसिका ।

பாஶஹஸ்தா பாஶ ஹந்த்ரீ பரமந்த்ர விபேதினீ ॥
மூர்த்தாZமூர்த்தாSநித்ய த்ருப்தா முநிமாநஸ ஹம்ஸிகா ।

பாசத்தைக் கரத்தில் வகித்தே இருப்பாய்
பசுக்கள்தம் பாசம் கணத்தினில் அறுப்பாய் 388

சத்துரு ஏவிய துர்மந் திரங்களை
க்ஷணத்தில் அழித்தே காத்திடும் தேவி
மெத்தவும் அழகிய உருவுடன் இருப்பாய்
உத்தமி உருவம் இலாமலும் இருப்பாய் 389

அகில ஜகங்களும் நின்உரு ஆகும்
அத்வைதப் பிரமமும் நீயே ஆவாய்
சிரத்தை யுடன்செயும் பூஜைகள் மிக்கவும்
அற்பமே ஆயினும் திருப்திநீ கொள்வாய். 390

மாமுனி வர்மனத் தாமரை ஓடையில்
மகிழ்வுடன் வசிக்கும் ஹம்ஸமே போற்றி

सत्यव्रता सत्यरूपा सर्वान्तर्यामिणी सती ॥
ब्रह्माणी ब्रह्म जननी बहुरूपा बुधार्चिता ।

ஸத்ய வ்ரதா ஸத்ய ரூபா ஸர்வாந்தர்யாமிநீ ஸதீ ॥
ப்ரஹ்மாணீ ப்ரஹ்ம ஜநநீ பஹுரூபா புதார்ச்சிதா ।

மேலாம் ஸத்திய வ்ரதம் உள் ளவள்நீ
முக்கா லும்அழி வற்ற பொருள்நீ 391

அகில உயிர்களின் உள்ளத்தில் அந்தர்
யாமினி யாய்இருந் தாட்டிடும் தேவி
ஸதிஎனும் உத்தம பதிவ்ரதை ஆவாய்
சங்கரீ பிரமனைப் பிழைக்கச் செய்தாய். 392

பேதம் இலாப்பரப் பிரம்ம ஸ்வரூபி
பிரபஞ்சம் அனைத்தையும் பெற்ற மஹேசி
உமையே பற்பல உருவம் கொள்ளினும்
ஒருத்தியே ஆவாய் நடிகையைப் போல. 393

தமோகுணம் உடைய ரௌத்ரீ ஆகிய
சாமுண் டிநவ கோடிபே தம்உளாய்
தேவி ரஜோகுண வைஷ்ணவி பேதம்
செப்புவர் எட்டுக் கோடிகள் என்றே 394

ஸத்துவ குணமாம் ப்ராம்ஹியின் பேதம்
என்பவற் றுக்கோர் சங்கியை இல்லை
இத்தனை கோடி சக்திக ளும்நீ
இவர்களின் பதியாய்ச் சிவனூர் இருப்பர் 395

சிவமா யோகிகள் வழிபடும் தேவீ

प्रसवित्री प्रचण्डाज्ञा प्रतिष्ठा प्रकटाकृतिः ॥

ப்ரஸவித்ரீ ப்ரசண்டாஞா ப்ரதிஷ்டா ப்ரகடாக்ருதி: ॥

ஜகங்கள் அனைத்தும் ஈன்ற ஸவித்ரீ
மிக்கவும் உக்கிர கோபம் உடையாய்
மாமறை போற்றும் பிர்மமே போற்றி 396

அகில ஜகங்களின் ஈசுவரி யேநின
தாக்கினைக் குப்பயந் தேயவர் தொழிலை
சூரியன் வாயு ம்ருத்யு எனும் இவா
செய்வர்என் றேமறைச் சிரங்கள் உரைக்கும். 397

வேதம் புகலும் விதிநிஷே தம்எனும்
வாக்கிய மாய்நின் ஆக்கினை இருக்கும்
நின்னிடை உலகம் நிலைபெற் றிருக்கும்
நீயே ஸர்வா தாரமும் ஆவாய் 398

எல்லா ஜீவர் இடத்துநான் என்னும்
உணர்வது வேமறை யாமல் இருக்கும்
அஹம்எனும் இந்தத் தன்உணர் வேநீ

प्राणेश्वरी प्राणदात्री पञ्चाशत्पीठरूपिणी ।

ப்ராணேச்வரீ ப்ராண தாத்ரீ பஞ்சாஶத் பீட ரூபிணீ ।

ஐம்புலன் ப்ராணன் களுக்கும் ஈசுவரி 399

அகில உலகிற்கும் பிராணனைக் கொடுப்பாய்
ஐம்பது பீடம் நின்உரு ஆகும்
தக்ஷன் மகத்தில் உடலை விடுத்த
தாக்ஷா யணிநின் உடலினைச் சுமந்தே 400

பித்தன் போல் அரன் திரிந்திட அதனைப்
பார்த்தே ஹரியோர் பாணம் விடுத்துன
உடலைச் சிதற அடித்திட ஐம்பது
தலங்களில் அவ்வுடல் சிதறி விழுந்தது. 401

இவையே நின் உடல் சிதறி விழுந்த
தலங்கள் க்ஷேத்திர பீடங்கள் ஆயின
முக்தி அளித்திடும் பீடங் கள் இவை
உத்தமி யேநின் உருவமே ஆகும் 402

विश्रृङ्खला विविक्तस्था वीरमाता वियत्प्रसूः ॥

விச்ருங்கலா விவிக்தஸ்தா வீர மாதா வியத்ப்ரஸூ: ॥

உமையே நினக்கோர் பந்தமும் இல்லை
ஒருவரும் இல்லா இடந்தனில் இருப்பாய்
போரில் மடிந்த வீரருக் கெல்லாம்
மெத்தவும் அன்புள மாதா ஆவாய் 403

ஆத்ம ஸ்வரூபிணி நின்னிடம் இருந்தே
ஆகா யாதிகள் உதித்தன ஆகும்

मुकुन्दा मुक्तिनिलया मूलविग्रहरूपिणी ।
भावज्ञा भवरोगघ्नी भवचक्रप्रवर्तिनी ॥

முகுந்தா முக்தி நிலயா மூலவிக்ரஹ ரூபிணீ ।
பாவஜ்ஞா பவ ரோகக்னீ பவசக்ர ப்ரவர்த்தினீ ॥

அச்சுதன் வடிவாய் நீ இருந் திடுவாய்
அழியா முக்திக் கிருப்பிடம் ஆவாய். 404

பாலை பகளா சாம்பவி வித்தைச்
சியாமளா என்னும் சக்திகட் கெல்லாம்
மூல விக்ரஹ வடிவாம் ஈசுவரி
மனத்தின் உணர்ச்சி அறிந்திடும் தேவி 405

பிறப்பெனும் பிணியை அகற்றுவை போற்றி
பவசக் கிரந்தனைச் சுழன்றிடச் செய்வாய்

छन्दःसारा शास्त्रसारा मन्त्रसारा तलोदरी ।
उदारकीर्तिरुद्दामवैभवा वर्णरूपिणी ॥

சந்தஸ்ஸாரா ஶாஸ்த்ர ஸாரா மந்த்ர ஸாரா தலோதரீ ।
உதார கீர்த்திருத்தாமவைபவா வர்ண ரூபிணீ ॥

சந்தஸ் எனும்மறை ஸாரமும் நீயே
சாஸ்திர மந்திர ஸாரமும் நீயே 406

துடியிடை யாய்பெரும் புகழினை உடையாய்
சொல்ல ஒணுமஹி மைதனை உடையாய்
வர்ணங்கள் என்றிடும் அக்ஷரங் களும்நீ
வகுத்திடும் நால்வகை ஜாதிகள் நீயே 407

जन्ममृत्युजरातप्तजनविश्रान्तिदायिनी ।
सर्वोपनिषदुद्घुष्टा शान्त्यतीतकलात्मिका ॥

ஜந்மம்ருத்யு ஜரா தப்த ஜந விச்ராந்தி தாயினீ ।
ஸர்வோபநிஷதுத்குஷ்டா ஶாந்த்யதீத கலாத்மிகா ॥

பிறப்பிறப் புடனே மூப்பெனும் தாப
த்ரயத்தால் தவிப்போர் தாபம் தவிர்த்தே
உவமை இலா உப சாந்தியை அளிப்பாய்
உமையே பிர்ம சுகத்தினைக் கொடுப்பாய் 408

மறைகளின் சிரங்கள் எலாம் அவை உன்னுடை
மகிமை தனைமிக விரிவாய்ப் புகழும்
சாந்தி அதீதை எனுமா காயத்தின்
சிறந்த கலைநின் உருவே ஆகும் 409

गम्भीरा गगनान्तस्था गर्विता गानलोलुपा ।

கம்பீரா ககநாந்தஸ்த்தா கர்விதா காநலோலுபா ।

மஹாஹ்ரதம் எனவே மறைசிரம் உரைக்கும்
மிக்ககம் பீர மடுவது நீயே
மஹாஹ்ரதை யாகிய நின்னுடன் ஐக்யம்
பெறுபவர் மந்திர வீரியம் பெறுவா 410

பூர்ணா ஹந்தை தனையே மாதர
வீர்யம் எனவே ஆகமம் புகலும்
தஹரா காய மத்தியில் இருப்பாய்
சிவையே பூர்ணா ஹந்தையை வஹிப்பாய் 411

கானத் தை மிக விரும்புவை போற்றி

कल्पनारहिता काष्ठाऽकान्ता कान्तार्धविग्रहा ॥

கல்பநா ரஹிதா காஷ்டாऽகாந்தா காந்தார்த்த விக்ரஹா ॥

கல்பனைக் கெட்டாப் பொருளே போற்றி
பகவதி காஷ்டை எனமறை புகலும்
பரகதி ஆவாய் பாபம் எரிப்பாய் 412
பதிதே கந்தனில் பாதியைக் கிரஹித்தனை

कार्यकारणनिर्मुक्ता कामकेलितरङ्गिता ।
कनत्कनकताटङ्का लीलाविग्रहधारिणी ॥

கார்ய காரண நிர்முக்தா காமகேளி தரங்கிதா ।
கநத் கநகதாடங்கா லீலாவிக்ரஹ தாரிணீ ॥

பாரவதி கார்ய காரணம்
காமகேளிகளை மென்மேல புரிவாய்
காந்தி மிகும்பொன் தாடங்கம் அணிவாய் 413
லீலையின் பொருட்டே நீ உரு எடுப்பாய்

अजा क्षयविनिर्मुक्ता मुग्धा क्षिप्रप्रसादिनी ।

அஜா க்ஷய விநிர்முக்தா முக்தா க்ஷிப்ர ப்ரஸாதினீ

நாயகி ஜன்ம க்ஷயங்கள் நினக்கிலை
அற்புதம் ஆகிய அழகுடை யவள்நீ
அன்னை சீக்கிரம் அனுக்ரஹிப் பவள்நீ 414

अन्तर्मुखसमाराध्या बहिर्मुखसुदुर्लभा ॥
त्रयी त्रिवर्गनिलया त्रिस्था त्रिपुरमालिनी ।

அந்தர்முக ஸமாராத்யா பஹிர்முக ஸுதுர்லபா ॥
த்ரயீ த்ரிவர்க நிலயா த்ரிஸ்தா த்ரிபுர மாலினீ ।

அந்தர் முகந்தனில் அன்புடன் நின்னை
ஆரா தித்துன் பக்தர் மகிழ்வர்
பாஹ்யத் தில்நின் பூஜையைச் செய்வது
பகவதி மிக்க ச்ரமம்உள தாகும். 415
ஸாமம் ரிக்குடன் யஜுர்என மூன்றாய்
சொல்லிடும் மாமறை வித்தையே போற்றி

அகர எழுத்தில் ஸாமம் தொடங்கும்
அங்ஙன மேருக் வேதமும் ஆகும். 416

இகரம் தன்னில் யஜுர் அது தொடங்கும்
ஈசுவரி இம்மூன் றெழுத்தும் சேரில்
சுசியெனும் வாக்பவ பீஜம துதிக்கும்
தேவி த்ரயீ இது நின்வடி வாகும். 417

தருமமோ டர்த்த காமம் எனவே
செப்பும்இம் மூன்றிற் கிருப்பிடம் ஆவாய்
முக்கா லத்திலும் அழிவற் றவள்நீ
மூவகை யாம் பொருள் அனைத்தும் நீயே. 418

அன்னாய் நின்ஸ்ரீ சக்கரத் திருக்கும்
அந்தர் தசாரம் எனவே உரைக்கும்
சக்கர நாயகி ஆகிய த்ரிபுர
மாலினி யாம் அதிஷ் டாத்திரி நீயே. 419

निरामया निरालम्बा स्वात्मारामा सुधासृतिः ॥

நிராமயா நிராலம்பா ஸ்வாத்மாராமா ஸுதா ஸ்ருதி: ॥

பிணியற் றவள்நீ பிடிப்பற் றவள் நீ
பார்வதி ஆண்பெண் என இரு வகையாய்
நீயே நின்னைப் பிரித்துல காகிய
நாடகம் அதனை நடித்தே மகிழ்வாய். 420

சிரஸில் ஸஹஸ்ர தளகம லம்அதில்
சந்திர வடிவாய்ப் பிந்துவ திருக்கும்
குண்டலி நீயே சுழுமுனை ஊடே
சென்றதில் தாக்கி அமுதினைப் பொழிவாய். 421

संसारपङ्कनिर्मग्नसमुद्धरणपण्डिता ।
यज्ञप्रिया यज्ञकर्त्री यजमानस्वरूपिणी ॥

ஸம்ஸார பங்க நிர்மக்ன ஸமுத்தரண பண்டிதா ।
யக்ஞ ப்ரியா யக்ஞ கர்த்ரீ யஜமான ஸ்வரூபிணீ ॥

பவமாம் சேற்றில் அமிழ்ந்திடு வோரைப்
பரிவுடன் எடுத்தே காத்தருள் செய்வாய்

பற்பல மகத்தால் நினையா ராதித்தல்
மிக்கவும் நினக்கது திருப்தியே ஆகும். 422

யக்ஞம் இயற்றிட தீக்ஷை வகிக்கும்
யஜமானன் பத்தினி நின்னுரு ஆகும்
யக்ஞம் இயற்றும் யஜமானன் சிவமே
யஜமானன் பத்தினி தீக்ஷையும் நீயே. 423

புத்திரன் ஸந்தா னம்எனச் சொல்வர்
பகவதி நீயே யஜமா னுகும்

धर्माधारा धनाध्यक्षा धनधान्यविवर्धिनी ।
विप्रप्रिया विप्ररूपा विश्वभ्रमणकारिणी ॥

தர்மாதாரா தநாத்யக்ஷா தநதான்ய விவர்த்திநீ ।
விப்ர ப்ரியா விப்ர ரூபா விச்வ ப்ரமண காரிணீ ॥

அகில தர்மங் களினு சிரயம்நீ
அகில தனங்களுக் கதிபதி நீயே. 424

மென்மே லும்தன தானிய விருத்தியை
அன்பருக் கருளும் அன்னாய் போற்றி
மெத்தவும் அந்தணர் மீதன் புடையாய்
விப்பிர வடிவே தேவிநீ ஆவாய். 425

அகில சராசர பிரம்மாண் டங்களை
ஆட்டியே வைக்கும் அற்புத சக்திநீ

विश्वग्रासा विद्रुमाभा वैष्णवी विष्णुरूपिणी ।
अयोनिर्योनिनिलया कूटस्था कुलरूपिणी ॥

விச்வக்ராஸா வித்ருமாபா வைஷ்ணவீ விஷ்ணு ரூபிணீ ।
அயோநிர் யோநிநிலயா கூடஸ்த்தா குல ரூபிணீ ॥

ஜகங்களை எல்லாம் விழுங்கிடு வாய்நீ
சிவையே பவளம் போல்ஜொலித் திடுவாய். 426

விஷ்ணுவின் சக்தி வைஷ்ணவி போற்றி
விஷ்ணுவி னுருவாய் விளங்குவை போற்றி
உத்பத்தி யிலலா உத்தமி போற்றி
உலகம் உதித்திடும் யோனியே போற்றி. 427

அக்ஞா னத்திற் காசிரய மாவாய்
அகில ஜகங்களும் நின் னுரு வாகும்.

ஒன்பதாவது தரங்கம் முற்றும்.

## பத்தாவது தரங்கம்.

वीरगोष्ठीप्रिया वीरा नैष्कर्म्या नादरूपिणी ।
विज्ञानकलना कल्या विदग्धा बैन्दवासना ॥

வீரகோஷ்டீப்ரியா வீரா நைஷ்கர்ம்யா நாதரூபிணீ
விக்ஞான கலநா கல்யா விதக்தா பைந்தவாஸநா ॥

மாப்பெரும் வீர கோஷ்டியை விரும்புவை
மிக்க பராக்ரம சக்தியே போற்றி. 428

அறவே கர்மப் பற்றில் லாதவள்
அகிலரின் ஹிருதய அனுஹத த்வனியாம்
நாதத்தின் உருவாய் இருப்பாய் பிர்ம்ம
ஸாக்ஷாத் கார ஞானத்தைக் கொடுப்பாய் 429

பதினுன் காம்வித் தைகளை நன்கு
பார்த்துணர் வதுவே விக்ஞா னம்ஆகும்
பார்வதி இந்த விக்ஞான மதையே
பக்தருக் கன்புடன் நீயனுக் கிரகிப்பாய் 430

மங்கள கரமாம் வாக்கினை உடையாய்
மேலாம் கலைகள் அனைத்திலும் வல்லாய்
மிக்கச் சமர்த்துள சக்தியும் நீஸ்ரீ
சக்கர மத்திய பிந்துவில் இருப்பாய். 431

இருபுரு வங்களுக் கிடைமேல் வட்ட
வடிவாம் பிந்துவில் இருந்திடும் தேவி
ஈசன் இடப்புறத் துள்ளம ணேன்மனீ
எல்லை யிலாஅமு தக்கடல் வாஸினி. 432

அஜபை என்றிடும் ஹம்ஸமந் திரத்தில்
அயனே பிந்துவின் உருவாய் இருப்பர்
பரனும் ஹரியும் விஸர்க்கம் எனும்இரு
பிந்துக்க ளாய்இணை பிரியா திருப்பர். 433

வாமை முதலாம சக்திகள் மூவர்
மகிமை உளஇச் சாதிகள்மூவர்
மும்மூன் றுகும அனைத்தும் மூன்று
பிந்துக்க ளாம்நின் உருவெனப் புகல்வர். 434

பிந்துவ தேநின் முகமண் டலமாம்
பகவதி விஸர்க்க பிந்துக்கள் இரண்டும்
நின்இரு குசமாம் அவற்றின் கீழாய்
நாதம தேநின் யோனிய தாகும். 435

மிக்க ரஹஸியம் ஆகிய காம
கலை இது என்றே ஆகமம் புகலும்
ஸத்குரு முகத்தால்ர கஸிய மிதனைத்
தெரிந்தோர் நினது ஸ்வரூபமே ஆகுவர். 436

ஒன்று கியரவி பற்பல கலச
உதகங் களில்பல வாகவே தோன்றும்
அதுபோல் அந்தக் கரண உபாதியால்
அகில உயிர்களின் ஆத்மா ஆகுவை. 437

तत्त्वाधिका तत्त्वमयी तत्त्वमर्थस्वरूपिणी ।

தத்வாதிகா தத்வமயீ தத்வமர்த்த ஸ்வரூபிணீ |

தத்துவம் அனைத்தும் நாசமுற் றிடினும்
சிவையே சாசுவதப் பொருளது நீயே
ஆத்தும தத்துவம் வித்யா தத்துவம்
அரனின் தத்துவம் எனும்இம் மூன்றுள். 438

ஆறு றுகிய தத்துவம் எல்லா
அடங்கும் மூவகைத் தத்துவம் இவற்றில்
சக்தி சிவம்எனும் தத்துவம் இரண்டில்
ஸத்தும் சித்தும் அழியாச் சுகமும். 439

மறைவிலா தெப்போ தும்மே இருக்கும்
மஹேச ஸதாசிவ சுத்த வித் தைகளில்
ஸத்தும் சித்தும் என்றும் இருக்கும்
சிவையே ஆனந் தம்மறைந் திருக்கும். 440

ஸத்தெனும் ஒன்றே மாயை முதல்புவி
வரையிலும் அழியா திருந்தே விளங்கும்

ஆனந் தம்சித் தெனவாம் இரண்டும்
அற்றதி னல்இவை அசுத்தங்கள் ஆகும். 441

ஆத்தும தத்துவம் வித்யா தத்துவம்
சிவதத் துவம்எனச் சொல்விடும் இவைகள்
ஸத்தாய்ச சித்தாய் ஆனந்தம் ஆன
சிவையே நின்திரு வுருவே ஆகும். 442

அறுவகை ஆகிய அத்வாக் களில் உள
தாகிய கலைகள் தத்துவம் புவனம்
என்னும் மூன்றிவை சிவத்தின் வடிவாம்
ஈசுவரி வர்ண பதமந் திரங்கள் 443

மூன்றும் சக்தியின் வடிவென ஆகமம்
மொழியும் அதால்அத் வாமயம் ஆக
அண்ட சராசரம் இருந்திடும் அத்வா
மயமாம் ஜகங்களும நின்வடி வாகும். 444

மறையின் சிரம்போ திக்கும் பெரிய
வாக்கியத் தில்சிவம் ஜீவன் என்றிடும்
இருவரைக குறிக்கும் தத்பதத் துவம்பதம்
இரண்டின் லக்ஷிய பிர்மமும் நீயே. 445

सामगानप्रिया सौम्या सदाशिवकुटुम्बिनी ॥

सव्यापसव्यमार्गस्था सर्वापद्विनिवारिणी ।

स्वस्था स्वभावमधुरा धीरा धीरसमर्चिता ॥

चैतन्यार्घ्यसमाराध्या चैतन्यकुसुमप्रिया ।

ஸாம கான ப்ரியா ஸௌம்யா ஸதாஶிவ குடும்பினீ ॥

ஸவ்யாபஸவ்ய மார்க்கஸ்த்தா ஸர்வாபத் விநிவாரிணீ ।
ஸ்வஸ்த்தா ஸ்வபாவ மதுரா தீரா தீர ஸமர்சிதா ॥

சைதன்யார்க்ய ஸமாராத்யா சைதன்ய குஸுமப்ரியா ।

சிவையே ஸாமகா னத்தை விரும்புவை
சந்திரன் போல்மனக் களிப்பினை அளிப்பாய்
ஸதாசிவ பத்தினீ சங்கரீ போற்றி
ஸவ்வியம் உடன்அப ஸவ்வியம் எனவே 446

கூறிடும் மார்க்கம் இரண்டிலும் இருப்பாய்
குணம்உள தேவயா னம் உடன் பிதிரு
யானம் என இரு மார்க்கம் உண்டதில்
இறந்தபின் தேவ யானத் தூடே 447

சென்றிடும் ஜீவர் கிரமமாய் முக்தியைச்
சிவையே அடைவர் புவிதிரும் பார்கள்
பிதிருயா னம்எனும் மார்க்கம் சென்றோர்
புசித்தே ஸ்வர்க்கம் புவிக்கே வருவர். 448

இவ்விரு மார்க்கமும் நீயே ஆவாய்
இன்னும் நாக வீதிகள் முதலாம்
தக்ஷிண உத்தர மத்தியம் என்னும்
நக்ஷத்ர வீதிகள் ஒன்பதும் நீயே. 449

ப்ரவிருத்தி நிவிருத்தி எனவே புகலும்
மார்க்கம் இரண்டும் மஹேசுவரி நீயே
வாமம் தக்ஷிணம் எனவே நின்னை
வழிபடும் மார்க்கங் களும்நின் உருவே. 450

சரணம எனவே நினை அடைந் தோரின்
ஸர்வா பத்தையும் தத்க்ஷணம் தீர்ப்பாய்
நின்னிடை யேநீ நிலைபெற் றிருப்பாய்
நிச்சலம் ஆன நெஞ்சுடன் இருபபாய். 451

இயற்கை யிலேமிக இனியவ ளாக
இருப்பாய் தெவிட் டா மதுவினுக் கொப்பாய்
என்றும் இனிய ஸ்வபாவமே உள்ளவள்
நிர்ப்பயம ஆய்மனத் தைரியம் உள்ளவள். 452

மாப்பெருந் தீரர் வழிபடும் தேவீ
முறையே ஞாதா ஞானம் ஞேயம்
எனவே தோற்றும் பேதங்கள் இன்றி
எல்லாம் சிவமயம் எனவே காணும் 453

பாவனை இதுவே சைதன் னியமய
அர்க்கியம் ஆகும் அர்க்கியம் இதனல்
அந்தர் முகந்தனில் பூஜித் துன்னுடன்
ஐக்கியம் ஆய்நின் அடியவர் நிற்பர். 454

ஐம்புலன் அடக்கம் சாந்தி அஹிம்ஸை
தயையுடன் ஞானம் தவமும் ஸத்யமும்
பாவனை என்னும் எண்சை தன்ய
புஷ்பம் இவற்றை மிக்க விரும்புவை. 455

सदोदिता सदातुष्टा तरुणादित्यपाटला ॥

ஸதோதிதா ஸதா துஷ்டா தருணாதித்ய பாடலா ॥

ஸாதுஜனங்களின் சித்தம் அதில்பரி
பூரண மாகப் பிரகாசித் திடுவாய்
மிக்கவும் களிப்புடன் என்றும் இருப்பாய்
இளம்ரவி போல்நீ சிவந்தே ஜொலிப்பாய். 456

दक्षिणादक्षिणाराध्या दरस्मेरमुखाम्बुजा ।
कौलिनीकेवलाऽनर्घ्यकैवल्यपददायिनी ॥

स्तोत्रप्रिया स्तुतिमती श्रुतिसंस्तुतवैभवा ।
मनस्विनी मानवती महेशी मङ्गलाकृतिः ॥

தக்ஷிணாதக்ஷிணாராத்யா தரஸ்மேர முகாம்புஜா ।
கௌளினீ கேவலாऽநர்க்ய கைவல்ய பத தாயினீ ॥

ஸ்தோத்ர ப்ரியா ஸ்துதிமதீ ச்ருதி ஸம்ஸ்துதவைபவா ।
மநஸ்வினீ மானவதீ மஹேசீ மங்களாக்ருதி: ॥

பண்டிதர் பாமரர் அனைவரும் போற்றும்
பரையே தெய்வம் நீயே ஆவாய்
புன்னகை ஒளிரும் பங்கய வதனி
பகவதி கௌளினி தேவியே போற்றி. 457

விலைமதிப் பில்லாக் கைவல் யபதம்
விருப்புடன் பக்தர் களிப்பவள் நீயே
தோத்திரப் பிரியை ஆகுவை போற்றி
துதிப்பவர் பொன்னும் ஞானமும் பெறுவர். 458

வேதம் துதிக்கும் வைபவம் உடையாய்
மிக்க சுதந்திரம் மானம் உடையாய்

மஹேச பத்தினி மாஹேச்வரி நீ
மங்களத் திவ்விய உருவே போற்றி. 459

विश्वमाता जगद्धात्री विशालाक्षी विरागिणी ।
प्रगल्भा परमोदारा परामोदा मनोमयी ॥

விச்வ மாதா ஜகத் தாத்ரீ விசாலாக்ஷீ விராகிணீ ।
ப்ரகல்பா பரமோதாரா பராமோதா மனோமயீ ॥

ஜகங்கள் அனைத்தையும் ஈன்றனை போற்றி
ஜகங்களை எல்லாம் தாங்கிடும் ஈசுவரி
விசாலமாம் ஆகிய நேத்திரம் உடையாய்
வைராக்கியம்மிக உடையாய் போற்றி. 460

துணிவும் பலமும் மிகுதியும் உடையாய்
திவ்ய உதார குணங்களை உடையாய்
உத்க்ருஷ்டம் ஆகிய கீர்த்தியை உடையாய்
உமையே நின்னுரு மனமே ஆகும். 461

व्योमकेशी विमानस्था वज्रिणी वामकेश्वरी ।
पञ्चयज्ञप्रिया पञ्चप्रेतमञ्चाधिशायिनी ॥

வ்யோமகேசீ விமாநஸ்த்தா வஜ்ரிணீ வாமகேச்வரீ
பஞ்சயஞ்ஞ ப்ரியா பஞ்ச ப்ரேத மஞ்சாதிசாயினீ ॥

வானினைக் கேசம் ஆகவே கொண்ட
விராட்டின் வடிவாம் ஈசுவரி போற்றி
கௌரி விமானத்தே இருந் திடுவாய்
கீர்த்தி மிகும்இந் திராணியும் ஆவாய். 462

வாமா சாரர் வழிபடும் தேவி
வகுத்த பஞ்சயக் ஞங்கள் ஆகும்
தைவம் பிர்மம் பிதிருக்கள் பூதம்
மானிடம் இவற்றை அன்புடன் ஏற்பாய். 463

பிரமன் விஷ்ணு ருத்ர மஹேசன்
ஸதாசிவம் எனவே சொல்லிடும் பஞ்சப்
ப்ரேதங்கள் ஆகும் மஞ்சத்தின் மீதுன்
பதிமடி மீதில் பரையே இருப்பாய். 464

पञ्चमी पञ्चभूतेशी पञ्चसंख्योपचारिणी ।
शाश्वती शाश्वतैश्वर्या शर्मदा शंभुमोहिनी ॥

பஞ்சமீ பஞ்ச பூதேஶீ பஞ்ச ஸங்க்யோபசாரிணீ |
ஶாச்வதீ ஶாச்வதைச்வர்யா ஶர்மதா ஶம்புமோஹினீ ||

ஸதாசிவ பத்தினீ பஞ்சமீ போற்றி
சிறப்புள ஸ்ரீவா ராஹியே போற்றி
ஐம்பூ தங்களுக் கீசுவரி நின்னை
ஐந்துப சாரத் தால் வழி படுவர். 465

அழியாச் சாசுவதப் பொருளே போற்றி
அழியாச் செல்வம் உடையாய் போற்றி
அழியா ஆனந்தம் அளிப்பவள் நீயே
அரனையும் மயக்கும் மோஹினி போற்றி. 466

धरा धरसुता धन्या धर्मिणी धर्मवर्धिनी ।
लोकातीता गुणातीता सर्वातीता शमात्मिका ॥

தரா தரஸுதா தன்யா தர்மிணீ தர்மவர்த்தினீ |
லோகாதீதா குணாதீதா ஸர்வாதீதா ஶமாத்மிகா ||

பூமியின் உருவாய் இருப்பாய் போற்றி
பர்வத ராஜன் மகளே போற்றி
தனமிக உடையாய் தனங்களை அளிப்பாய்
தரும குணம்மிக உடையாய் போற்றி. 467

மேன்மேல் தர்ம விருத்தியைச் செய்வாய்
வைகுந் தம்பிர்ம லோகம் ஸ்வர்கம்
என்னும் இவற்றைக் கடந்தே அப்பால்
இருக்கும் கைலையின் ஈசுவரீ போற்றி 468

முக்குண மும்கடந் தப்பால் இருப்பாய்
சப்தம் அதற்கும் எட்டா திருப்பாய்
உபாதிகள் அற்றுப சாந்தம தாகிய
உமையே பிர்ம ஸ்வரூபியே போற்றி. 469

बन्धूककुसुमप्रख्या बाला लीलाविनोदिनी ।
सुमङ्गली सुखकरी सुवेषाढ्या सुवासिनी ॥

பந்தூக குஸுமப்ரக்யா பாலா லீலா விநோதினீ ।
ஸுமங்கலீ ஸுககரீ ஸுவேஷாட்யா ஸுவாஸினீ ॥

பந்தூ கத்தின் மலர்போல் ஸ்ரீபர
மேசுவரி நின் திரு மேனி விளங்கும்
என்றும் ஒன்பது வயதுள பாலே
ஆகவே இருக்கும் ஈசுவரி போற்றி. 470

படைத்தல் காத்தல் அழித்தல் எனவே
புகலும் லீலையைப் புரிந்தே களிப்பாய்
திவ்விய மங்களம் உள ஸுமங் கலியே
சுகத்தினை அருளும் சிவையே போற்றி. 471

சோபன மாம்திரு உரு உடை யவள்நீ
சிவையே நித்ய ஸுமங்கலி நீயே

सुवासिन्यर्चनप्रीताशोभना शुद्धमानसा ।
बिन्दुतर्पणसंतुष्टा पूर्वजा त्रिपुराम्बिका ॥

ஸுவாஸின்யர்ச்சன ப்ரீதாஶோபநா ஶுத்த மாநஸா ।
பிந்துதர்பண ஸந்துஷ்டா பூர்வஜா த்ரிபுராம்பிகா ॥

ஸுவாஸி னிஎனும் ஸுமங்கலி பூஜையை
செய்வ துனக்குத் திருப்தி அளித்திடும். 472

பூரண அழகுள தேவியே போற்றி
பரிசுத்த மனம்உள பகவதி போற்றி
மங்கள ரூபிநின் ஸ்ரீசக் கரத்து
மத்தியில் இருக்கும் பிந்துவில் பிர்ம்ம 473

க்ஷத்ரிய வைசிய சூத்திரர் என்போர்
சிரத்தை யுடன்பால் நெய்தேன் மத்யம்
என்னும் இவற்றால் தர்ப்பணம் செய்வர்
ஈசுவரி அதனால் திருப்தியை அடைவாய். 474

அனைத்தினுக் கும் முன் உதிக்கும் இச்சை
ஆகும் நீத்ரிபு ராம்பிகை நீயே

दशमुद्रासमाराध्या त्रिपुराश्रीवशंकरी ।
ज्ञानमुद्रा ज्ञानगम्या ज्ञानज्ञेयस्वरूपिणी ॥

योनिमुद्रा त्रिखण्डेशी त्रिगुणाम्बा त्रिकोणगा ।
अनघाद्भुतचारित्रा वांछितार्थप्रदायिनी ॥

अभ्यासातिशयज्ञाता षडध्वातीतरूपिणी ।
अव्याजकरुणामूर्तिरज्ञानध्वान्तदीपिका ॥

आबालगोपविदिता सर्वानुल्लंघ्यशासना ।

தஶமுத்ரா ஸமாராத்யா த்ரிபுரா ஸ்ரீவஶங்கரீ ।
ஞான முத்ரா ஞான கம்யா ஞான ஜ்ஞேய ஸ்வரூபிணீ ॥

யோனி முத்ரா த்ரிகண்டேஶீ த்ரிகுணாம்பா த்ரிகோணகா ।
அநகாத்புத சாரித்ரா வாஞ்சிதார்த்த ப்ரதாயினீ ॥

அப்யாஸாதிஶய ஞாதா ஷடத்வாதீத ரூபிணீ ।
அவ்யாஜ கருணாமூர்த்திரஞான த்வாந்த தீபிகா ॥

ஆபாலகோப விதிதா ஸர்வானுல்லங்க்ய ஶாஸநா ।

அரிதா கியதச முத்திரை களினால்
அடியவர் நின்னைப் பரிவுடன் தொழுவர். 475

த்ரிபுரா ஸ்ரீயெனும் நாயகி நின்வசம்
ஆகுவள் ஞான முத்திரை நீயே
ஞானத்தி னால்நினை அடைந்திடல் ஆகும்
நாயகி ஞானம் ஜ்ஞேயம் என்றிடும் 476

அறிவும் அறிபடு பொருளும் நீயே
அன்னை யோனிமுத் திரையும் நீயே
மகிமை உளமுக் கண்டமுத் திரை நீ
மாயையின் மூன்று குணங்களும் உள்ளவள். 477

அகில ஜகங்களின் ஜனனியே போற்றி
அற்புத ஸ்ரீசக் கரமதில் இருக்கும்
முக்கோ ணந்தனில் இருப்பாய் பாப
துக்கம் கடந்தப் பாலே இருப்பாய். 478

அற்புதத் திவ்விய சரித்திரம் உடையாய்
அடியவர் கோரும் வரங்களை அளிப்பாய்
பரையே ஜீவப் பிரம்ம ஐக்கிய
பாவனை யால் நினை அறிந்திடல் ஆகும். 479

அறுவகை ஆகும் அத்வாக் களையும்
கடந்ததற் கப்பால் இருந்திடு வாய்நீ
கள்ளங் கபடறு கருணையின் உருவே
கரையில் ஆனந்தக் கடலே போற்றி. 480

அக்ஞா னம்எனும் இருளை முற்றும்
அகற்றும் ஞானச் சுடரே போற்றி
எல்லா ஜீவர் இடத்தும் நான்என
அன்றாய் விளங்கும் தன்உணர் வதுவே. 481

ஈசுவரி நினது ஸ்வரூபம் இதனை
என்றும் பால கோபரும் அறிவர்
நினதாக் கினையைக் கடப்போர் இல்லை
உமையே அரன்மகிழ் சிவையே போற்றி. 482

श्रीचक्रराजनिलया श्रीमत्त्रिपुरसुन्दरी ॥

श्रीशिवा शिवशक्त्यैक्यरूपिणी ललिताम्बिका ।
एवं श्रीललितादेव्या नाम्नां साहस्रकं जगुः ॥

ஸ்ரீசக்ரராஜநிலயா ஸ்ரீமத்த்ரிபுர ஸுந்தரீ ॥

ஸ்ரீஶிவா ஶிவஶக்த்யைக்ய ரூபிணீ லலிதாம்பிகா ।
ஏவம் ஸ்ரீலலிதா தேவ்யா நாம்னும் ஸாஹஸ்ரகம் ஜகு: ॥

इति श्रीब्रह्माण्डपुराणे उत्तरखण्डे श्रीहयग्रीवागस्त्यसंवादे **श्रीललितासहस्रनामस्तोत्रकथनं** नाम द्वितीयोऽध्यायः ॥

சிவசக் திமயம் ஆகிய சக்கர
ராஜத் திருக்கும் நாயகி போற்றி
ஸ்ரீமதி சிவனார் பத்தினி ஸ்ரீமத்
திரிபுர ஸுந்தரி சிவையே போற்றி. 483

சக்தி சிவங்களின் ஐக்கிய வடிவாம்
சங்கரீ நின்னிரு சரணம் போற்றி
சிவத்தினை விட்டோர் நிமிடமும் பிரியா
சக்திநீ என்றே சாஸ்திரம் உரைக்கும். 484

அக்கினி சிவனார் ஆகுவர் அதனின்
உஷ்ணம தாகவே உமைநீ இருப்பாய்
ரவியே சிவம்அதன் ஒளியே நீதான்
ரம்மிய மதிசிவம் சந்த்ரிகை நீயாம். 485

திவ்விய ஸுதாம்புதி தன்னில் மணிமய
தீவினில் சிந்தா மணிகிருஹம் அதனில்
ஸ்ரீசக்ர ராஜ பிந்துவில் பஞ்ச
பிர்மம் எனப்புக லும்மஞ் சத்தில் 486

சிவகா மேசுவரர் மடிமீ திருந்திடும்
ஸ்ரீலலி தாம்பிகை தேவியே போற்றி
ஜகங்களுக் கெல்லாம் ஆனந்தம் அளிப்பாய்
தேவி என் துதியை அன்புடன் ஏற்பாய். 487

அகில ஜகங்களை ஈன்றிடும் அன்னாய்
ஆவை அதனால் ஜீவரை எல்லாம்
அன்புடன் காத்திடும் பாரம் நினதே
ஆகும் ஜீவருக் கனுக்ரஹம் செய்வாய். 488

ஆனந்த வாரிதி ஆகிய நின்னை
அன்னாய் துதிப்போர்க் காபத் தில்லை
சிசுவினைக் காத்திடும் தாய் என அவரைத்
தேவிநீ ஸந்ததம் காத்தரு கிருப்பாய். 489

தருணத்தில் மாரி பொழிந்திட வேண்டும்
தானியத் தால்புவி நிரம்பிட வேண்டும்
சச்சர வின்றிமா னிடவர்க் கம்எலாம்
சுகமாய்ப் புவியில் வாழ்ந்திட வேண்டும் 490

*தருமம் நன்கு தழைத்திட வேண்டும்*
*தெய்வ பக்தி எல் லோர்க்கும் வேண்டும்*
*நீதி வழுவா அரசியல் வேண்டும்*
*நல்வழி யில்நரர் நடந்திட வேண்டும்.* **491**

*பரையே நீஎனக் களித்திடு வாக்கால்*
*பரானந்த ஸிந்து எனும்துதி யிதனுல்*
*நின்னடி துதித்துப சாந்தியை அடைந்தேன்*
*அன்னுய் நினக்கிதை அர்ப்பணம் செய்தேன்.* **492**

ஸ்ரீபரானந்த ஸிந்துவின் பத்தாவது தரங்கம் ஸம்பூர்ணம்.

## ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம ஸ்தோத்திர அகவல் முற்றும்.

சுபமஸ்து.

